# புதிய இராகங்கள்




**தமிழ்ப் பல்கலைக்கழகம்**

**தஞ்சாவூர்.**

# புதிய இராகங்கள்

ஆசிரியர்

து. ஆ. தனபாண்டியன், பி.ஏ., ஏ.பி.டி. ஐ. [இலண்டன்]
சிறப்பு நிலைப் பேராசிரியர்
இசைத்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்




தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்.

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 2

திருவள்ளுவர் ஆண்டு 2016 ஆவணி—செப்டம்பர் 1985

ஆசிரியர்: து. ஆ. தனபாண்டியன்

நூல்: புதிய இராகங்கள்

பதிப்பு: முதற்பதிப்பு

விலை: உரு. 105-00

அச்சு: சர்மாஸ் சானடோரியம் பிரஸ்
கணேஷ்நகர், புதுக்கோட்டை.

# முகவுரை

பழந்தமிழிசையாகிய கருநாடக இசையுள் புதிய இராகங்கள் பலவற்றை ஆராய்ந்து கண்டுபிடித்து அவைகளின் இலக்கணம் (லட்சணம்), போக்கு (சஞ்சாரம்) முதலியவற்றைக்கண்டு, அவைகளின் வடிவத்தைத் தெரிந்து, அவற்றைப் பாடல்களில் அமைத்துப் பாடுதற்குரிய இசைமுறையை அமைத்து இயற்றும் பணியை மேற்கொண்டு அவற்றை இந்நூல் வடிவில் தருகிறேன்.

அநேக இசைக்கலைஞர்களின் உள்ளத்தில் பின்வருமாறு பல கேள்விகள் எழுகின்றன. புதிய இராகங்களை உருவாக்க இயலுமா? புதிய இராகங்கள் தேவையா? இன்று நம் பழக்கத்தில் இருக்கும் சில இராகங்கள் போதாவா? இவைகளையே நாம் பாடிப்பாடி மேலும் மேலும் அவைகளை வளப்படுத்தினால் போதாதா? இத்தகைய கேள்விகளுக்கு விடை காணவேண்டியது அவசியமாகும்.

இன்று மனிதன் எல்லாத் துறைகளிலும் புதுமையைக் கண்டடைய விரும்புகிறான். இசைத் துறையிலும் அப்புதுமைகளைப் படைப்பது அத்தியாவசியமாகின்றது. இப்பொழுது நம் பழக்கத்தில் உள்ள இராகங்கள் பழங்கால இசைக்கலைஞர்களால் ஆராய்ந்து கண்டு உருவாக்கப்பெற்றவை அல்லவா? அவ்வாறாயின் நாம் ஏன் புதிய இராகங்களை உருவாக்க இயலாது? புதிய இராகங்களைப் பாடப்பாட அவையும் நாளடைவில் மெருகு பெற்று பழக்கத்திற்கு வந்துவிடும்.

புதிய இராகங்களைப் படைக்கவேண்டும் என்று நான் சொல்லும்போது, வெறும் புதிய ஆரோசை (ஆரோகணம்), அமரோசையை (அவரோகணம்) மட்டும் உருவாக்குவதை நான் கருத்தில் கொள்ளவில்லை. நம்மிடையே உள்ள இசை நூற்களில் குறிப்பிடப்படாததும், இதுவரையில் நம் பழக்கத்தில் இல்லாததுமான நூற்றுக்கணக்கான புதிய பல ஆரோசை அமரோசைகளை உருவாக்கிவிடலாம். கணிப்பொறியின் மூலம் (Computer) 72 மேளகர்த்தா இராகங்களிலிருந்து பிறக்கும் அத்தனை கணிதமுறை சுர சேர்க்கைகளையும் (Permutations and Combinations) பெற்று விடலாம். இந்தச் சுர சேர்க்கைகள் அத்தனையையும் புதிய கிளை இராகங்களாக ஆக்கிவிடலாம். இது போதாது. கணிப்பொறியின் மூலம் கிடைக்கப்பெறும் இராகங்கள் நம்மால் பாடுதற்கு இயலும் வகையில் அமையவேண்டும். அவை கேட்பதற்கு இன்சுவை (ரஞ்சகம்) கொண்டனவாகவும் இருக்க வேண்டும். கிடைக்கப்

பெறும் இராகங்கள் அனைத்தும் இவ்வாறு அமையும் என எதிர்பார்க்க முடியாது.

ஒவ்வொரு இராகத்திற்கும் ஒரு தனி வடிவம் இருப்பதை நாம் அறிவோம். இந்தத் தனி வடிவத்தை மூர்ச்சனை, சாயல் அல்லது சாயை என்று அழைக்கிறோம். சங்கராபரண இராகத்திற்கும், கல்யாணி இராகத்திற்கும் ஒரே ஒரு சுரம்தான் வித்தியாசம். ஆனால் இந்த இரு இராகங்களின் சாயலில் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது. இதுபோன்ற பல உதாரணங்களைக் குறிப்பிடலாம். ஓர் இராகத்தின் சில பிடிகளைக் (சுரத்தொடர்கள்) கேட்டமாத்திரத்தில், அது இன்ன இராகம் என்று நாம் இனம் கண்டு கொள்ளுகிறோம். பின்பு அந்த இராகத்தின் முழுச்சாயலையும் கேட்டுப் பரவசமடைகிறோம். இராகத்தின் ஒவ்வொரு தனித்தன்மை வாய்ந்த பிடியும் (சுரத்தொடர்) நம் உள்ளத்தை ஈர்க்கும் சக்தி வாய்ந்தது. நம்முடைய இசையின் சிறப்பே அதுதான்.

பல புதிய இராகங்களைக் கண்டுபிடித்த பின்பு அந்த இராகங்களின் வடிவம் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ளுவது அவசியமாகும். புதிய இராகத்தின் சீவசுரம், அதற்கு அடுத்தபடியான முக்கிய சுரம் அல்லது சுரங்கள், அந்த இராகத்தின் இணை, கிளை, நட்புச் சுரத்தொடர்கள், தவிர்க்கவேண்டிய பகைச் சுரத்தொடர்கள், அந்த இராகத்தின் போக்கு (சஞ்சாரம்) முதலியவைகளை அறிந்து, அந்த இராகத்தைப் பாடிப்பாடி அதன் முழு வடிவத்தையும் கண்டுகொள்ளவேண்டும். அதன் பின்பு அந்த இராகத்தில் பாடல்களுக்குரிய இசையை அமைக்கவேண்டும்.

கீழே குறிப்பிட்டுள்ள இசை நூற்களை ஒப்பு நோக்கி, அந்த நூற்களில் காணப்படாத முப்பத்து இரண்டு புதிய இராகங்களை உருவாக்கி அவைகளில் இசை அமைத்துள்ளேன்.

1. கருணாமிர்த சாகரம்—இரண்டாவது நூல்—தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றியது.
2. சங்கீத சந்திரிகா—சேலம் மாணிக்க முதலியார் இயற்றியது.
3. பாலையாழி—தஞ்சாவூர் பி. எம். சுந்தரம் இயற்றியது.
4. பரத சங்கீத ஸ்வயபோதினி—சுந்தரராஜ ஸ்வாமிகள் இயற்றியது.
5. History of South Indian Carnatic Music—ஆர். ரெங்கராமானுஜ ஐயங்கார் இயற்றியது.

6. சங்கீதசுரப்பிரஸ்தார சாகரமு (தெலுங்கு)—நாதமுனி பண்டிதர் இயற்றியது.

7. இராகமாலை அல்லது இராகப்பிரஸ்தாரங்கள்—டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் இயற்றியது.

8. இராகமாலா அல்லது பண்திரட்டு—டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் இயற்றியது.

9. இன்னிசைப்பொழில்—டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் இயற்றியது.

10. தச்சூர் சிங்கராச்சார்லு சகோதரர்கள் இயற்றிய இசைநூற்கள் (தெலுங்கு)

11. பூர்வீக சங்கீத உண்மை—மதுரை நாதஸ்வர வித்வான் எம். கே. எம். பொன்னுசாமிபிள்ளை இயற்றியது.

12. சங்கீத கல்பதருமம்—எல். முத்தையா பாகவதர் இயற்றியது.

13. முத்தையா பாகவதர் சாகித்தியங்கள் (அபூர்வ இராகங்கள்).

14. சங்கீதானுபவ சாரசங்கிரகம்—பெருங்குளம் ஸ்ரீநிவாச ஐயங்கார் இயற்றியது.

15. வீணை சேஷண்ணு, மைசூர் வாசுதேவாச்சாரியார், மைசூர் சதாசிவராவ், மைசூர் வெங்கடகிரியப்பா, மகாராஜா ஜெயசாம்ராஜ உடையார் முதலியோர் இயற்றிய அபூர்வ இராகக்கிருதிகள்.

16. சங்கீத இராகக்கடல்—வீணை வித்துவான் பம்பாய் என். மகாதேவ அய்யர் இயற்றியது.

17. ஜனக ஜன்ய கர்நாடக இராக லட்சணங்கள்—பேராசிரியர் கே. இராமச்சந்திரன் இயற்றியது.

18. மகாபாரத சூடாமணி—பாகம் 4
சங்கீதாதி ராகமேள லக்ஷணம்—முடிகொண்டான் வெங்கட்ராம அய்யர், ஆர். விஸ்வநாதய்யர் ஆகியோர் இயற்றியது.

19. ராகசுதாரசம்—சுவாமிமலை எஸ். ஜானகிராமன், கே. எஸ். ரங்காச்சாரி ஆகியோர் இயற்றியது.

20. ராகநிதி—சுப்பராவ் இயற்றியது.

21. ராகப் பிரவாகம்—டாக்டர் எம். என். தண்டபாணி, திருமதி டி. பட்டம்மாள் இயற்றியது.

தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் கண்டுபிடித்து இசை உலகிற்கு அளித்துள்ள இராகபுடமுறையைப் பின்பற்றி இந்த இராகங்களுக்குரிய இணை, கிளை, நட்புச் சுரத்தொடர்களை விவரமாக எழுதியிருக்கிறேன். இந்த இராகங்களின் சீவசுரம், அமுதவைப்பு முதலியவைகளையும் கண்டுபிடித்துக் குறிப்பிட்டுள்ளேன். இந்த இராகங்களின் இலக்கணத்தையும் (லட்சணம்) போக்கையும் (சஞ்சாரம்) கொடுத்திருக்கிறேன். இணை, கிளை, நட்புச் சுரத்தொடர்கள் பற்றிப் பதினோராவது அத்தியாயத்திலும், இராகபுட முறைபற்றிப் பன்னிரண்டாவது அத்தியாயத்திலும் விளக்கியிருக்கிறேன்.

இந்த இராகங்களில் கீதம், சுரஜதி, ஜதிசுரம், வர்ணம், கீர்த்தனை முதலியவைகளுக்கு இசை அமைத்துள்ளேன். ஆதி, ரூபகம், திரிபுடை, திஸ்ரஜாதிரூபகம் (ஜம்பை), திஸ்ர ஏகம் முதலிய பல்வேறு தாளங்கள் அவற்றில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இராகபுடமுறையை விளக்குவதற்காக நம் பழக்கத்தில் உள்ள மலகரி, அம்சத்தொனி, சக்ரவாகம் ஆகிய இராகங்களுக்கு இணை, கிளை, நட்புச் சுரத்தொடர்களை எழுதி, இந்த இராகங்களின் சீவசுரம், அமுதவைப்பு முதலியவைகளைக் குறிப்பிட்டிருக்கிறேன். இந்த இராகங்களின் இலக்கணம் (லட்சணம்), போக்கு (சஞ்சாரம்) முதலியவைகளையும் விளக்கியிருக்கிறேன். மலகரி இராகத்தில் ஒரு கீதத்திற்கும், அம்சத்தொனி, சக்ரவாகம் ஆகிய இராகங்களில் கீர்த்தனைகளுக்கும் இசை அமைத்துள்ளேன். இதன் பின்பு முப்பத்து இரண்டு புதிய இராகங்களுக்கு இணை, கிளை, நட்புச்சுரத் தொடர்களை எழுதி அவைகளில் பாடல்களுக்குரிய இசை அமைத்திருக்கின்றேன்.

கரந்தை தமிழ்ச்சங்கப் புலவர் கல்லூரியின் முன்னாள் துணை முதல்வர் பாவலரேறு ச. பாலசுந்தரம் அவர்கள் இசை அமைப்பிற்குரிய பாடல்களை இயற்றியுள்ளார்கள். தெய்வநெறி ஒழுக்கம், தமிழ்மொழிச் சிறப்பு, நல் ஒழுக்கத்தின் மேன்மை, இசையின் மாண்பு முதலியவை இந்த சாகித்தியங்களின் பொருள்களாக அமைந்துள்ளன. இறைநெறிப் பாடல்கள் எல்லாச் சமயத்தவரும் பாடி இன்புறத்தக்க முறையில் பொதுவாக அமைந்துள்ளன. புதிய இராகங்களில் நான் இயற்றியுள்ள இசை அமைப்புகளை மிகவும் பொறுமையோடு கேட்டு அவற்றிற்குப் பொருத்தமான முறையிலும் சிறப்பாகவும் சொற்சுவையும் பொருட்சுவையும் கமழப் பாவலரேறு அவர்கள் சாகித்தியம் இயற்றியுள்ளார்கள். சாகித்தியம் இயற்றும் பணியில் அவர்கள் காட்டிய ஆர்வத்திற்கும் தளராத உழைப்பிற்கும் நான் கடமைப்பட்டுள்ளேன்.

புதிய இராகங்களில் அமைக்கப்பட்டுள்ள பாடல்கள் அனைத்தும், இராக விளக்கம், இராக ஆலாபனை முதலியவற்றுடன் ஐந்து ஒலி நாடாக்களில் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளன.

புதிய இராகங்களான கிளை இராகங்களுக்குரிய தாய் இராகங்களைக் குறிப்பிடும்பொழுது, கிளை இராகத்திற்குப் பொருத்தமான, மேளகர்த்தா இராக வரிசையில் முந்தினதான தாய் இராகத்தைக் குறிப்பிடுவதுதான் மரபு. உதாரணமாக வசந்தமல்லி என்ற புதிய இராகத்தின் ஆரோசை ச க$^{4}$ ம$^{2}$ ப நி$^{6}$ ச் ஆகும். அமரோசை ச் த்$^{4}$ ப ம$^{2}$ க$^{4}$ ச ஆகும். இது 23வது மேளகர்த்தா இராகமான கௌரிமனோகரிக்கும் 11வது மேளகர்த்தா இராகமான கோகிலப்ரியாவிற்கும் பொதுவாக உள்ளது. மேளகர்த்தா வரிசையில் முந்தினதாகிய 11வது மேளகர்த்தா இராகமான கோகிலப்ரியாவில் வசந்தமல்லி இராகம் பிறந்ததாகவே குறிப்பிட்டிருக்கிறேன்.

புதிய இராகங்களான கானமுகாரி (ஆறாவது பாடல்), நாத ரஞ்சனி (ஏழாவது பாடல்), வசந்ததோடி (ஒன்பதாவது பாடல்), குமுதசந்திரிகா (இருபதாவது பாடல்) ஆகியவைகளில் இளி (பஞ்சமம்) தவிர்க்கப்பட்டுள்ளது.

பூர்வதன்யாசி (மூன்றாவது—ஜதிசுரம்), அமுதசுரபி (பதினொன்றாவது பாடல்) ஆகிய புதிய இராகங்களில் வக்ரசுரப் பிரயோகங்கள் உள்ளன.

72 மேளகர்த்தா இராகநியதியின் படியே புதிய இராகங்கள் உருவாக்கப் பட்டுள்ளன. ஆகவே அந்நிய சுரங்கள் கொண்ட பாஷாங்க இராகங்கள் இந்தப் புதிய இராகங்களில் தவிர்க்கப் பட்டுள்ளன.

புதிய இராகம் ஒவ்வொன்றிற்கும் இராக இலக்கணம், இராகசஞ்சாரம், சிவசுரம், இராகத்தின் முக்கிய சுரத்தொடர்கள் முதலியவை கொடுக்கப்பட்டு உள்ளன.

72 மேளகர்த்தா இராகங்களில் பிறந்த கிளை இராகங்களை தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய ‘கருணாமிர்த சாகரம்’—இரண்டாவது நூல், ஆர். ரெங்கராமானுஜ ஐயங்கார் இயற்றிய "History of South Indian Carnatic Music", சுந்தரராஜ சுவாமிகள் இயற்றிய ‘‘பரத சங்கீத ஸ்வயபோதினி’’, டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் இயற்றிய ‘‘இராக மாலை அல்லது இராகப்பிரஸ்தாரங்கள்’’ ஆகிய நூற்களிலிருந்து தொகுத்து எழுதியுள்ளேன். இந்த நூற்களின் ஆசிரியர்களுக்கும், உரிமையாளர்களுக்கும் என் நன்றி உரியதாகும். இங்கே தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ள இராகங்களின் மொத்த எண்ணிக்கை 3,512 ஆகும்.

பல புதிய இராகங்களைக் கண்டுபிடித்து அவைகளில் இசை அமைக்கும் அரிய வாய்ப்பினை எனக்கு நல்கி, பேராதரவு தந்து ஊக்கமளித்து உதவிய தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணை வேந்தர் டாக்டர். வ. அய். சுப்பிரமணியம் அவர்களுக்கு என் மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த ஆய்வுப் பணியில் எனக்கு ஊக்கம் அளித்து உதவிய டாக்டர். மதுரை எஸ். சோமசுந்தரம் அவர்கள், சென்னை பல்கலைக்கழக இசைத் துறைத் தலைவர் டாக்டர். எஸ். சீத்தா அவர்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம் ஓலைச்சுவடித்துறை பேராசிரியர். மு. சண்முகம் பிள்ளை அவர்கள் ஆகியோருக்கு என் நன்றி உரியதாகும்.

தஞ்சாவூர்
1985

து. ஆ. தனபாண்டியன்.

# பொருளடக்கம்

# 1

# இசையின் சிறப்பு

''ஆதியிலே வார்த்தை (ஒலி) இருந்தது
அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது
அந்த வார்த்தை தேவனாயிருந்தது
அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாயிற்று
அவருள் சீவன் இருந்தது
அந்தச் சீவன் மனிதருக்கு ஒளியாயிருந்தது''

**(விவிலிய நூல்—அருட்டிரு யோவான் 1:1-4)**

இறைவன் ஒலிவடிவாக இருக்கின்ருர். ''ஏழ் இசையாய் இசைப் பயனுய்'' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் கடவுள் இசையாகவும் இசைப் பயனுகவும் விளங்குகின்றவர் என்று குறிப்பிட்டுள்ளார்.

''ஓசையொலி யெலாம் ஆனுய் நீயே
உலகுக்கு ஒருவனுய் நின்ருய் நீயே''

என்று இறைவன் ஓசை ஒலி வடிவாய் விளங்கி உலகை இயக்கி அருள்கின்ருன் என்று அப்பரடிகளின் திருத்தாண்டகம் கூறுகிறது.

''பண்ணிடைத் தமிழ் ஒப்பாய் பழத்தினில் சுவை ஒப்பாய்
கண்ணிடை மணி ஒப்பாய் .. .. ..''

என்ற சுந்தரர் பாடலில் இறைவனைப் பண்ணோடு சேர்த்து இணைத்துப் பாடியிருக்கிருர்.

**இசைவழி இறைவனை வழிபடுதல் :**

மனிதர்கள் இறைவனை வழிபடுவதற்குப் பல வழிமுறைகளைக் கடைப்பிடிக்கின்றனர். சிலர் அமைதியான ஓர் இடத்தை நாடிச்சென்று அங்கு பிரார்த்தனை புரிகின்றனர். சிலர் நோன்பு இருந்து உள்ளத்தை ஒருமுகப் படுத்தி, தியானத்தில் ஈடுபடுகின்றர். சிலர் வீட்டில் அறைக்கதவைப் பூட்டிக் கொண்டு உள்ளிருந்து இறைவனைப் பற்றிய தியானத்தில் சிலமணி நேரத்தைச் செலவிடுகின்றனர். சிலர் வருடத்திற்கு இரண்டு மூன்று முறைகள் தியான ஆசிரமங்களுக்குச் சென்று சில நாட்கள் செபத்திலும் தியானத்திலும் ஈடுபடு கின்றனர். இவை எல்லாவற்றையும்விட இலேசான சிறந்தவழி ஒன்று உண்டு. இசையின் மூலம் இறைவனை வழிபடுவதுதான் அது.

இறைவனின் அடியார்கள் இறைவன் மீது கொண்ட அன்பினுல் நெஞ்சம் நெக்குருகிக்கண்ணீர் மல்கிப் பாடிய பாடல்கள் அனந்தம். அப்பாடல்களை நாமும் பாடும்பொழுது நம் உள்ளம் உருகி இறைவனுடன் ஒன்றி நிற்கின்றது என்றால் இசையின் சிறப்பை என்னவென்று சொல்வது. ஆகவே இசையை அறிந்தால் இறைவனை அறியலாம் என்று சொல்வதில் தவறில்லை.

''நாதமே முக்கலை நாதமூவெழுத்து
நாதமே முக்குணம் நாதமே முப்பொருள்
நாதமே மூவுலகாகி விரிந்து
நாதமாம் பரத்தில் லயித்தது பாரே''

என்ற அகவலும்,

'நாதம் பரத்தில் லயித்திடுமதனுல்
நாதமறிந்திடப் பரமுமறியலாம்''

என்ற பாடலும் இதைத்தான் கூறுகின்றன.

**வயப்படுத்தும் கலை :**

கலைகள் அனைத்திலும் இசைக்கலையே மேலானது. நல்லார், பொல்லார், கற்றார், கல்லார், சிறியார், பெரியார் ஆகிய அனைவருமே இசைக்கு வயப்படுகிருர்கள்.

மகுடியைக்கேட்டு நச்சரவும், குழலிசையைக்கேட்டு ஆடு மாடுகளும் மெய்ம்மறந்து இன்புற்று நிற்பதைப் பார்க்கின்றோம். தாவரங்களின் அருகில் இன்னிசை ஒலிக்கும்போது அவைகள் விரைவில் வளர்கின்றன என விஞ்ஞானிகள் ஆய்ந்து கண்டறிந்துள்ளனர். சுருங்கச் சொன்னால் எல்லா உயிர்களும் இசையொலியைக் கேட்டு இன்புற்று அதன் வயப்படுகின்றன.

கடவுள் இசையுருவாக விளங்குவதால் அவரும் இசை ஒலிக்கு மிக எளிதில் வயப்படுபவர் என்பது நம் முன்னோர்கள் கண்டறிந்த முடிவு.

எனவே கடவுளிடம் மனிதரையும், மனிதரிடம் கடவுளையும் இசைய வைப்பது இசை என்று நாம்கொள்வது பொருத்தமானதாகும்.

**இசை மருத்துவம் :**

இசை பல்வேறு நோய்களைக் குணப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது என ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். இசை மருத்துவம்[2] **(Music Therapy)** குறிப்பாக உணர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்கள், மனோவியாதியுள்ளவர்கள், மனம் வளர்ச்சி குன்றியவர்கள், வேதனையால் அல்லல்படுவோர் ஆகியோருக்கு மன அமைதியைத் தந்து, நோயைக் குணமாக்குகிறது என டாக்டர். டொனால்டு மிச்சல் தமது நூலில் தெரிவித்திருக்கிறார்.

ஒரு மனோவியாதி மருத்துவ மனையில் அவர் எட்டு ஆண்டுகள் ஆய்வு புரிந்து, ''இசை மருத்துவம்'' பற்றிய தமது அனுபவங்களைத் தெரிவித்திருக்கிறார். இளம் குற்றவாளிகள், ஒழுங்கற்ற நடத்தையுள்ள இளைஞர்கள் ஆகியோரைத் திருத்தவும், இசை மருத்துவம் நல்லமுறையில் பயன்படுகிறது என்று அவர் கூறியிருக்கிறார். மது அருந்துதல், போதை தரும் பொருள்களை உபயோகித்தல் போன்ற கெட்ட பழக்கங்களுக்கு அடிமைப்பட்டவர்களையும் படிப்படியாகத் திருத்துவதற்கு இசை மருத்துவம் பயன்படுகிறது என அவர் தமது அனுபவத்தை இந்நூலில் விளக்கியிருக்கிறார்.

தூக்கமின்மையால் அவதியுறுவோர் நீலாம்பரி இராகம் கேட்பதின் மூலம் மன அமைதியும், நல்ல தூக்கமும் பெறுவார்கள் என பேராசிரியர் சாம்பமூர்த்தி[3] கூறியிருக்கிறார். இருதயத்தின் நோய்களையும் குணமாக்கும் ஆற்றல் இசைக்கு உண்டு என அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

---

1. ஆதாரம் : கருணாமிர்த சாகரம்—முதல் புத்தகம்—முகவுரை.

2. Music Therapy by Dr. Donald E. Michel, Ph. D., Texas Woman's University, Denton, Texas. Publisher : Charles A. Thomas, Spring Field, Illinois, U. S. A.

3. South Indian Music—Book V—by : Prof. P. Sambamoorthy. (Pages 258—261)

# 2

# இசைத்தமிழின் தொன்மை

பாரதத்தின் மிகப்பழமையான இருமொழிகள் தமிழும், வடமொழியும் ஆகும். இவைகளில் தமிழ் இன்றைக்கு ஏறத்தாழ இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே ஒரு சிறந்த பேரிலக்கிய மொழியாக இருந்தது என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இன்று வரையும் அது ஒரு பேச்சுமொழியாகவும் இருந்துவருகிறது. அது மேலும் மேலும் வளம்பெற்று வளர்ந்து வருகிறது.

தமிழ் மொழியை இயல், இசை, கூத்து[1] என மூன்று வகைப்படுத்தி முத்தமிழ் என பழந்தமிழ் மக்கள் அழைத்தனர். எனவே தமிழ்மொழி வரலாற்றில், இசை ஒரு சிறப்பான இடத்தைப் பெறுகிறது.

**தொல்காப்பியத்தில் இசைக்குறிப்புகள் :**

அமிழ்தமெனப் போற்றப்படும் தமிழ் மொழியிலே உள்ள நூற்களில் எல்லாம் மிகப்பழமையும், பெருமையும் வாய்ந்தது தொல்காப்பியமாகும். இது கிறிஸ்துவுக்கு முன் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டது என இலக்கிய வல்லுநர்கள் கருதுகின்றனர். இடைச்சங்கத்தாருக்கும், கடைச்சங்கத்தாருக்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம் என இறையனார் களவியலுரை பகருகின்றது. இந்நூலில் கூறப்பட்ட கணக்கின்படி இடைச்சங்கம் கி. மு. 1320-இல் தொடங்கப்பெற்றதாதல் வேண்டும் என்பது அறிஞர்களின் முடிவாகும். எனவே இவரது காலம் கி. மு. இரண்டாயிரம் ஆண்டுகள் என தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரையுடன் விளக்கவுரையும் பதிப்பித்துள்ள பண்டித வித்வான் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் இந்நூலின் ஆராய்ச்சி முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரங்கள் கொண்டது. எழுத்தும், சொல்லும் தமிழ்மொழியின் அமைதியை விளக்குகின்றன. பொருள் பழந்தமிழரின் ஒழுக்கத்தை எடுத்துக்காட்டுகிறது. பழமையும் வளமையும் கொண்ட இந்நூல் மூலம் பழங்காலத்தில் தமிழ்மொழி எவ்வாறு வளமுள்ளதாக இருந்தது என்பதையும், தமிழர்களின் வாழ்வியல், ஒழுக்கம், முதலியவை எவ்வாறு இருந்தன என்பதையும் நாம் அறிய முடிகிறது.

அகத்திய முனிவர் மாணாக்கர் பன்னிருவருள் ஒருவரும் இடைச்சங்கப் புலவருள் ஒருவருமான தொல்காப்பிய முனிவர் இதை இயற்றிய ஆசிரியராவார். பழமையான காப்பியக்குடியில் பிறந்ததால் இப்பெயர் வந்தது என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய அறுவரில் ஒருவரான இளம்பூரணர், தொல்காப்பியனாரின் ஆசிரியரான அகத்தியனார் முத்தமிழுக்கும் இலக்கணமாக அமைந்த அகத்தியம் என்ற நூலை இயற்றியிருந்ததாகச் சொல்லுகின்றார். இறையனார் களவியலுரையிலும் இது கூறப்பட்டுள்ளது. இந்த நூல் இறந்து போயிற்று. தொல்காப்பியத்திற்கு சில நூற்றாண்டுகளுக்கு முன்பே முத்தமிழ், மிகச்சிறப்பான நிலையிலிருந்தது என்று இதிலிருந்து நாம் ஊகிக்க இடமுண்டு.

தொல்காப்பியம் ஓர் இலக்கண நூலாக இருந்தபோதிலும் இதில் இசைத்தமிழைப்பற்றிய குறிப்புகளையும் ஆங்காங்கே நாம் காணலாம். உதாரணமாகத் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் 33 ஆவது நூற்பாவில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

''அளபிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்''

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் இளம்பூரணர் உரையில் இவ்வாறு கொடுக்கப்பட்டுள்ளது.

''உயிரெழுத்துக்களெல்லாம் தமக்குச் சொன்ன அளவினைக் கடந்து ஒலித்தலையும், ஒற்றெழுத்துக்கள் தம்மொலி முன்கூறிய அளபின் நீடலையும் குரல் முதலிய ஏழிசையோடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசை நூற்கண்ணும் உள எனச்சொல்லுவர் அவ்விசை நூலாசிரியர் என்று சொல்லுவர் புலவர்''.

இசை சம்பந்தப்பட்ட வேறு பல குறிப்புகளையும் தொல்காப்பியத்துள் நாம் ஆங்காங்கே காணலாம். தொல்காப்பியனுர் செய்யுளியலில் ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலிப்பா எனப்பாக்கள் நான்கென்றும், இந்நால்வகைச் செய்யுள்களும் அறம், பொருள், இன்பம் என்னும் மும்முதற் பொருள்களையும் உரிப்பொருளாகக் கொண்டு பாடப்பெறுவன என்றும் கூறியிருக்கிறுர். நால்வகைப் பாக்களுள் ஒன்றாகிய கலிப்பாவினை ஒத்தாழிசைக்கலி, கலிவெண் பாட்டு, கொச்சகம், உறழ்கலி என நான்காகப் பகுத்துள்ளார் தொல்காப்பிய ஆசிரியர்.

ஒத்தாழிசைக்கலி பற்றி தொல்காப்பியச் செய்யுளியலில் பேராசிரியர் கூறியதையும், அதனையடியொற்றிச் சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார் தரும் விளக்கத்தையும் கூர்ந்து நோக்குங்கால், இக்காலத்தில் தென்னுட்டில் வழங்கும் இசைப்பாடல்களில் பல்லவி, அனுபல்லவி, சரணம் எனக்காணப்படும் இசையுருப்படிகளின் அமைப்பு, தொல்காப்பிய செய்யு ளியலில், கூறப்படும் ஒத்தாழிசைக்கலியின் அமைப்பினையும் நாடகத்துறை யிலும் வழங்கிய தேவபாணி இசைப்பாட்டின் அமைப்பினையும் அடியொற்றிய தென்பது நன்கு புலனாகும் எனப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் கூறியிருக்கிறார்[2].

**திவாகரத்தில் காணும் இசை விளக்கம்:**

கி. பி. எட்டாவது நூற்றாண்டில் இயற்றப்பெற்ற சேந்தன் திவாகர நூலில்[3] ஒலிபற்றிய பெயர்தொகுதியில் பண்டைக்காலத்தில் வழங்கிய ஏழிசையின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

''குரலே துத்தம் — கைக்கிளையுழையே
இளியே விளரி — தாரமென்றிவை
எழுவகையிசைக்கும் — எய்தும் பெயரே''

மற்றொரு சூத்திரத்தில் ஏழிசைக்குரிய எழுத்துக்களைச் சொல்லுகிறார்.

''ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் இவ்வேழெழுத்தும் ஏழிசைக்குரிய''

ஏழு உயிர் நெட்டெழுத்துக்களையும் கொண்டு பூர்வ தமிழ் மக்கள் ஏழிசையைப் பாடினார்கள் என்று இதிலிருந்து நாம் ஊகிக்கலாம்.

ஆகவே மொழிக்கும், இசைக்கும் உள்ள மிக நுட்பமான உறவைப் பழந்தமிழ் மக்கள் உணர்ந்திருந்தனர் என்றும், இசைக்கு இலக்கணம் வகுக்கும் திறமை தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே அவர்களுக்கு இருந்ததென்றும் நாம் காண்கிறோம்.[4]

**சங்க இலக்கிய நூல்கள் :**

ஒரு நாட்டின் நாகரிகச் சிறப்பையும், வாழ்க்கைப் பண்பாட்டினையும் அறிந்துகொள்வதற்கு அந்த நாட்டில் நின்று நிலவுகின்ற சீரிய இலக்கியங்களே உதவுகின்றன. செந்தமிழ் நாட்டின் சிறப்பையெல்லாம் நம்மவர்களும் பிற நாட்டினரும் அறிந்துகொள்ளச் செய்வது சங்க நூற்களேயாகும். பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு போன்ற சங்க இலக்கிய நூற்கள் பண்டைத்தமிழ் மக்களின் வாழ்வு, கலை முதலியவற்றை விளக்கும் கருவூலங்களாகும். பத்துப்பாட்டில் பழங்காலத்து மன்னர்கள் எவ்வாறு பாணர்களை ஆதரித்து வந்தனர் என்றும், பாணரின் வாழ்க்கைமுறை எவ்வாறு இருந்தது என்றும் கூறப்பட்டுள்ளது.

**பாணர் வாழ்வும் யாழும் :**

பண்டைய காலத்தில் தங்கள் வாழ்நாள் முழுவதும் பாடுவதையே தொழிலாகக்கொண்ட பாணர்கள் சீரும் சிறப்புமாய் வாழ்ந்து வந்தனர்.[5] இவர்கள் யாழ் என்னும் இனிய இசைக் கருவியை இசைத்துக்கொண்டு இனிமையாகப் பாடி இறைவனைத் துதித்து யாவரையும் மகிழ்வித்து வந்தனர். சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை போன்ற சங்க நூற்கள் பாணர்களின் இசைத்திறனை எடுத்துரைக்கின்றன.

அக்காலத்தில் பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்னும் நான்கு வித யாழ்களும்[6] வேறு பல யாழ்களும் இருந்தன என்று தெரிகிறது. அக்கால மன்னர்களும் பாணர்களைப் போற்றி ஆதரித்து வந்தனர். பாணர், சென்னியர், வைரியர், சூதர், மாகதர், இன்னிசைகாரர், மதங்கர் முதலிய பெயர்களால் அழைக்கப்பட்டனர். இன்னிசைப்பணிபுரிந்த பெண்களுக்கு விறலி, மதங்கி, பாண்மகள், பட்டி, பாடினி என்னும் பெயர்கள் இருந்தன என்று திவாகர முனிவர் இயற்றிய சேந்தன் திவாகரத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

**பரிபாடல் :**

கடைச்சங்கத்தார் தொகுத்த பரிபாடல் எழுபது என்பது இறையனார் அகப்பொருள் உரையாலும், தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் பேராசிரியர் உரையாலும் தெரியவருகிறது.

இப்பொழுது நமக்கு இருபத்து இரண்டு பாடல்களே கிடைத்துள்ளன. எஞ்சியவை இறந்துபட்டன. ஒவ்வொரு பாடலின் முடிவிலும் துறை, இயற்றிய ஆசிரியர் பெயர், இசைவகுத்தோர் பெயர், பண்ணின் பெயர்

பற்றிய பழங்குறிப்புகள் உள்ளன. முதற்பாடலுக்கும் இருபத்து இரண்டாம் பாடலுக்கும் இக்குறிப்புகள் கிடைக்கவில்லை.

இந்நூலிற்கு உரை வகுத்தவர் பரிமேலழகர். இசை வகுத்தோர் கண்ணகனார், கண்ணனாகனார், கேசவனார், நல்லச்சுதனார், நாகனார், பித்தாமத்தர், நன்னாகனார், பெட்ட நாகனார், மருத்துவன் நல்லச்சுதனார் நந்நாகனார் ஆகியோராவர்.

முதலில் அமைந்த பதினொன்று பாடல்களின் பண் பாலையாழ், அடுத்து வரும் ஐந்து பாடல்களின் பண் நோதிறம். அதன் பின்னருள்ள நான்கு பாடல்களின் பண் காந்தாரம். இவ்வகைப் பண்வரிசையில் பாடல்கள் அமைந்துள்ளமை நோக்கினால் தேவாரப்பாடல்களைப்போல் பரிபாடலும் பண்முறை பற்றித்தொகுக்கப்பெற்று, பாடகர்களால் பாடப்பெற்று வந்தன என்று கருத இடமுண்டு.

அவர்கள் குறிப்பிட்ட பண்களின் இசைக்குறிப்பும், இசை முறையும் நமக்குக் கிடைக்கவில்லை.

**அடியார்க்கு நல்லார் காட்டும் இசை நூற்கள் :**

இன்றைக்குச் சுமார் 1800[7] ஆண்டுகளுக்கு முன்பு இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரம் ஓர் இசைக்கருவூலமாகத் திகழ்கிறது. சொற் சுவையிலும், பொருட் சுவையிலும் இக்காப்பியம் சிறந்து விளங்குகிறது. இதற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் சிகண்டி என்னும் முனிவரால் இயற்றப்பட்ட ''இசை நுணுக்கம்'' யாமளேந்திரர் என்னும் ஆசிரியரால் செய்யப்பட்ட இசைத்தமிழ் நூலாகிய ''இந்திரகாளியம்'', அறிவனார் இயற்றிய ''பஞ்சமரபு'', ஆதிவாயிலாரென்னும் ஆசிரியரால் செய்யப்பட்ட ''பரத சேனாபதீயம்'' என்னும் நாடகத் தமிழ் நூல், மதிவாணர் என்னும் பாண்டியர் இயற்றிய ''மதிவாணர் நாடகத் தமிழ் நூல்'' என்னும் ஐந்து இசை நூற்களை மேற்கோள்களாகக் கொண்டுள்ளார். இவைகளில் அறிவனார் இயற்றிய ''பஞ்சமரபு'' மட்டும் நமக்குக் கிடைத்துள்ளது. தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீயம், தாளவகையோத்து, கடைச் சங்கப் புலவர்கள் இயற்றிய பெருங்குருகு, பெருநாரை போன்ற இசை நூற்கள் எல்லாம் அவர் காலத்திற்கு முன்பே இறந்துபோயின என்று அவர் தெரிவித்திருக்கிறார்.

**சிலப்பதிகார உரையில் ஏழிசைப்பெயர் :**

சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அரும்பத உரையாசிரியர் கி. பி. பதின்மூன்றாம் அல்லது பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும்,

அடியார்க்கு நல்லார் கி. பி. பதினைந்தாம் அல்லது பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்றும் தமிழ் மொழியியல் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இந்த உரையாசிரியர்கள் காலத்தில் என்ன இசைச்சொற்கள் வழக்கிலிருந்தனவோ அவைகளையே இவர்கள் தங்கள் உரைகளில் பயன்படுத்தியுள்ளனர். உதாரணமாக குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம், என்னும் பெயரில் பழங்காலத்தில் வழங்கப்பட்ட ஏழு சுரங்களும் பிற்காலத்தில் சட்ஜம் (ச), ரிஷபம் (ரி), காந்தாரம் (க), மத்யமம் (ம), பஞ்சமம் (ப), தைவதம் (த), நிஷாதம் (நி) என்ற வடமொழிப் பெயர்களில் அழைக்கப் பட்டன.

**முன்னாள் இசைவாணர் திறம் :**

அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில் ஆங்காங்கே அக்காலத்து இசைத் தமிழ் பற்றிய பல உண்மைகள் காணக்கிடைக்கின்றன. உதாரணமாக இக்காலத்து இசைவாணர்களைவிட அந்தக் காலத்து இசைப் புலவர்கள் இசைத் தமிழில் அதிகமான தேர்ச்சி பெற்று விளங்கினார்கள். நம்மிடையே ஓர் இசை வல்லுநர் இசை நிகழ்ச்சி நிகழ்த்துவதாயிருந்தால் அவருக்குத் தெரிந்திருக்க வேண்டியவைகள் எல்லாம் நமக்குத் தெரியும். சுருதி பிசகாமல் பாடவேண்டும்; தாளம் சரியாக இருக்கவேண்டும். ஓர் இராகத்தை அதனுடைய வடிவத்தைக் கெடுக்காமல், இசை இலக்கணப் பிழையில்லாமல் பாடத் தெரிந்திருக்கவேண்டும். பாடும் பாடல் புரியாத ஒரு மொழியில் இருந்தாலும் பரவாயில்லை. இன்னும் சொல்லப்போனால் தானம், நிரவல், பல்லவி இவைகளெல்லாம் தெரிந்திருந்தால் ரொம்பவும் நல்லது. ஆனால் அக்காலத்து இசைவாணனுக்கு இவைகளெல்லாம் தெரிந்ததுமல்லாமல், எல்லாவற்றிலும் முக்கியமான மற்றொன்றும் தெரிந்திருந்தது. பாட்டு இயற்றினவரின் மனக்குறிப்பையும், அந்தப் பாட்டின் முழு அர்த்தத்தையும் உணர்ந்து, உணர்ச்சியோடு பாடுவதுதான் அது. இன்னும் ஒரு சிறப்பான குறிப்பு என்னவென்றால், அவன் இயல், இசை, கூத்து ஆகிய எல்லாவற்றிலும் தேர்ச்சி பெற்றிருந்தான். பல நிகழ்ச்சிகளில், இவை மூன்றும் ஒரே சமயத்தில் சாதிக்கப்பட்டன. இவைகளையெல்லாம் பார்க்கும்போது ஆதிகாலத்தில் இசைத்தமிழ் எவ்வளவு சிறப்புப்பெற்று விளங்கினது என்று நினைத்து வியக்க இடமிருக்கிறது.

**தண்ணுமையின் முதன்மை :**

அடுத்தாற்போல் இசைக்கருவிகளுக்குள்ளே தண்ணுமை என்னும் மிருதங்கத்திற்குத்தான் இளங்கோவடிகள் முக்கிய இடம் கொடுத்திருக்கிறார்.

இசையாசிரியனின் இலக்கணத்தைப்பற்றி விவரித்தவுடனே தண்ணுமையைப் பற்றித்தான் சொல்லுகிறார். இதுமட்டுமல்ல. இசையரங்கில் வாய்ப் பாட்டிற்கு அடுத்தாற்போல் நுட்பமான லயச்சொற்கட்டுகளை அமைத்து, வாசித்து, இசைக்கே ஒரு துணைபோல் நிற்பதால், இந்த இன்னிசைக் கருவிக்கு அதிக கவனம் செலுத்தியிருக்கிறார். இசையாசிரியனுக்குத் தெரிந்தவையெல்லாம் தண்ணுமையோனுக்கும் தெரிந்திருக்கவேண்டும் என்று அவர் சொல்லியிருக்கிறார்.

யாழும் குழலும் கண்டப் பாடலும் இசைந்து கேட்போர் செவிக்கு எது இனிமையாய் இருக்கும் என்று தண்ணுமையோன் அறிந்து, அந்தந்த இசைக் கருவியைத் தகுந்த முறையில் இயக்கும்படிச் செய்துவந்தான். அப்படி இசைக் கருவிகள் எல்லாம் இசையைப் பிறப்பிக்கும்போது தானும் குறிப்பறிந்து சேர்ந்து வாசித்து, அடக்கி வாசிக்குமிடத்தில் அடக்கி வாசித்தும், மிகுத்து வாசிக்குமிடத்தில் மிகுத்து வாசித்தும், மற்ற இசைக் கருவிகளின் குறையை நிரப்பியும் தன் கலையின் திறனையும், சிறப்பையும் அதேசமயத்தில் எடுத்துக் காட்டுவதற்கும் வல்லவனாய் இருந்தான் என்று தெரிகிறது

**குழல் :**

நமது பண்டைத்தமிழ் இலக்கியத்தில் மிகவும் சிறப்பித்துக் கூறப்பட்டு உள்ள இசைக் கருவிகளுள் குழலும் ஒன்று. இது மிகவும் பழமையான காலந்தொட்டு வழக்கில் இருந்த இசைக் கருவியாகும். நமது முன்னோர் குழலை வேய்ங்குழல் என்றும், புல்லாங்குழல் என்றும், வங்கியம் என்றும் அழைத்து வந்திருக்கின்றனர். புல்லாங்குழல் செய்வதற்குரிய மரங்களையும், உலோகத்தையும் உரையாசிரியர் தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார். மூங்கிலில் செய்வது உத்தமம். வெண்கலத்தில் செய்வது மத்திமம். சந்தனம், செங்காலி, கருங்காலி ஆகிய மரங்களில் செய்வது அதமம் என்று கூறியிருக் கிறார். குழலை எவ்வாறு செய்வது என்பது பற்றி அடியார்க்கு நல்லார் விவரமாக விளக்கியிருக்கிறார். மேலும் குழலாசிரியனின் அமைதி முதலியவைகளெல்லாம் சிலப்பதிகாரத்தில் சிறப்பாகச் சொல்லப்பட்டு இருக்கின்றன.

**யாழாசிரியன் :**

யாழாசிரியன் அமைதி பற்றிச் சொல்லும்பொழுது பண்ணுப்பெயர்த்தல் (கிரகபேத முறை) முறையின்படி கிடைக்கும் செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம் பாலை ஆகிய ஏழு பாலைப் பண்களையும் மற்றும் பல்வேறு பண்களையும் இசைப்பதில் தேர்ச்சி பெற்றிருந்தான் எனக்குறிப்பிட்டிருக்கிறார்.

**பஞ்சமரபு :**

பழந்தமிழ் மக்களின் இசைநாடக இலக்கணம் கூறும் நூற்களில் பஞ்ச மரபும் ஒன்றாகும். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரை எழுதுவதற்கு ஆதாரமாகக் கொண்ட நூற்களில் இதுவும் ஒன்றாகும். இசைமரபு, வாச்சிய மரபு (முழவு) நிருத்தமரபு, அவிநய மரபு, தாளமரபு என்னும் ஐந்து மரபுகளைப் பற்றி இந்நூல் கூறுகிறது. பழந்தமிழ் மக்கள் வழக்கிலிருந்த நூற்றுமூன்று பண்கள் பற்றிய விவரங்கள் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் ஆசிரியர் அறிவனார் ஆவார். இவர் சேறை என்னும் ஊரினர் எனத் தெரிகின்றது. சேறை என்பது பாண்டி நாட்டுச் சேற்றூர் எனிபதனின் மரூஉ மொழியாகும். சோழ நாட்டிலும் சேறை என்ற ஊர் உள்ளது. இவ்வூர்களில் ஆசிரியர் எந்த ஊரைச் சேர்ந்தவர் என்பது ஆராய்தற்குரியது. ஆசிரியர் வைணவ சமயத்தினர் என்பது அவர் பாடிய பாடல்கள் மூலம் தெரிகிறது.

எழுமாத்தூர் வேலம்பாளையம் வித்வான் தெய்வசிகாமணிக் கவுண்டர் பஞ்சமரபு நூலைப் பதிப்பித்து இசைத்தமிழுக்குப் பெரும்பணி ஆற்றியுள்ளார்.

இந்நூல் ஆசிரியர், திருமாறன் என்னும் பாண்டிய மன்னன் காலத்தவர் என இந்நூலின் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. முடத்திருமாறன் என்று அழைக்கப்பட்ட திருமாறன் கூடலென்னும் மதுரையில் கடைச்சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த மன்னனாவான். ஆகவே இந்நூல் கடைச்சங்க காலத்து நூல் எனக் கூறப்பட்டுள்ளது.

சாளரபாணி என்ற பண்பற்றி பஞ்சமரபில் சொல்லப்பட்டுள்ளது. படுமலைப்பாலையிற் பிறக்கும் பண்களில் பதினான்காவதாகவும், பண்ணியற்றிறம் எழுபதில் எழுபதாகவும் இப்பண் காட்டப் பெற்றிருக்கிறது. இந்தப் பண் தேவாரத்தில் காணப்பெறவில்லை. அதாவது தேவார காலமாகிய 7-8 நூற்றாண்டுகளில் தோன்றவில்லை. பிற்காலத்தில் 11ம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் பூந்துருத்தி நம்பிகாட நம்பி என்பவர் கோயில் ஆகிய தில்லைத்தலத்திற்கு சாரளபாணிப் பண்ணில் ஒரு திருவிசைப்பா பாடியிருக்கிறார். இது ஒன்பதாவது சைவத் திருமுறையில் உள்ளது. இப்பண்ணிற்கு இலக்கணம் கூறும் நூல் 8-11 நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலமாகிய 9ம் நூற்றாண்டுக்குரியது என்று கொள்வது பொருத்தமுடையது என்று பேராசிரியர் அருணாசலம் குறிப்பிட்டிருக்கிறார்[8].

பஞ்சமரபில் பல வடமொழிச்சொற்கள் காணப்படுகின்றன. இந்நூலின் தலைப்பே வட்மொழிக் கலப்புடன் அமைந்திருக்கிறது. சங்ககால

நூற்களில் வடமொழிச் சொற்கள் தவிர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே பஞ்ச மரபு சங்ககால நூலாக இருக்க இயலாது. இது காலத்தால் மிகவும் பிற்பட்டது என்பது ஆய்வாளர்களின் கருத்து.

**கருணாமிர்த சாகரம் :**

தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இசைத் தமிழைப் பற்றித் தாம் கண்டு அறிந்த உண்மைகளையும், பல ஆய்வாளர்கள், அறிஞர்கள் ஆகியோரின் கருத்துக்களையும், பழந்தமிழ் நூற்களில் சொல்லப்பட்ட அரிய பல விளக்கங்களையும் ஒருங்கே தொகுத்து, சுமார் ஏழு ஆண்டுகள் விடாமுயற்சியுடன் பாடுபட்டுக் ''கருணாமிர்த சாகரம்—முதல் புத்தகம்'' என்னும் இசைத்தமிழ் ஆராய்ச்சி நூலை 1917-ம் ஆண்டு வெளியிட்டார். இசை சம்பந்தமான பல அரிய உண்மைகளைக் கொண்ட இந்நூலை ஓர் ஒப்பற்ற இசைக்களஞ்சியம் என்று கூறலாம். இந்நூல் சுமார் 1200 பக்கங்களைக் கொண்டது. இதில் இசைத்தமிழின் சிறப்பு, இசையின் பூர்வீகம், ஓர் இயக்கில் (ஸ்தாயி) உள்ள அலகுகள் (சுருதிகள்) பற்றிப் பண்டைத் தமிழ் நூற்களில் கூறப்பட்டவை, பண்ணுப்பெயர்த்தல் முறையில் (கிரகபேத முறை) பிறக்கும் செம்பாலைப் பண் முதலிய ஏழு பெரும் பாலைப் பண்கள் பற்றிய குறிப்புகள், பழந்தமிழ் நாட்டில் வழங்கிவந்த பாலை, மருதம், குறிஞ்சி, நெய்தல் என்னும் நால்வகை யாழ்களைப் பற்றிய விவரங்கள் முதலியவை கொடுக்கப்பட்டுள்ளன.

அலகுகள் பற்றிய தீவிர ஆய்வு செய்து ஓர் இயக்கில் 24 அலகுகள் உள்ளன எனப் பல்வேறு ஆதாரங்களுடன் இவர் நிருபித்திருக்கிறார். இசைத் தமிழ் 12 சுரங்கள், மற்றும் 24 அலகுகளில் அடங்காது என்றும், அது 48, 96 போன்ற நுண் அலகுகள் (நுட்ப சுருதிகள்) கொண்டது என்றும் ஆதாரப் பூர்வமாகக் கூறியிருக்கிறார்.

**யாழ்நூல் :**

யாழ்நூல் என்னும் இசைத்தமிழ் நூலை இயற்றிய அருட்டிரு விபுலானந்த அடிகளார் பழங்கால யாழ்கள் பற்றிய விவரங்கள், பாணர் வரன் முறை, ஏழிசையின் பிறப்பு, ஏழ்பெரும்பாலைப்பண்கள், பன்னிருபாலை, யாழாசிரியன் அமைதி, தேவாரத்தின் இசையமைதி, இக்காலத்தில் வழங்கும் 72 மேள இராகங்களின் மூர்ச்சனைகள் முதலியவற்றைத் தமது நூலில் விவரித்துள்ளார்.

**பழந்தமிழ் இசை :**

இராவ் சாகெப் கு. கோதண்டபாணி பிள்ளை அவர்கள் இயற்றிய இந்நூலை சைவசித்தாந்தக் கழகம் 1959ம் ஆண்டு வெளியிட்டுள்ளது.

பழந்தமிழ் இசையின் அடிப்படை யாது? அது எவ்வாறு தோன்றி எவ்வாறு வளர்ந்தது என்பவைகள் இந்நூலில் ஆராயப்பட்டுள்ளன. பல இலக்கிய மேற்கோள்களைக் காட்டி, ஆசிரியர் தமிழிசையின் பழமையை எடுத்துக் காட்டியிருக்கிறார். பிற்காலத்தில் அதன்கண் புகுந்த புதுமையையும் குறிப்பிடுகிறார். பழந்தமிழிசை முதற்கண் ஐந்திசையாய் இருந்து பின்பு ஏழிசையாக வளர்ச்சி எய்துள்ளது என்றும், உழையும் தாரமும் நீங்கிய ஐந்திசைகளே தொடக்கத்திலிருந்தன என்றும் ஆசிரியர் கூறியிருக்கிறார். சீனம், எகிப்தியம், கிரேக்கம் முதலிய நாடுகளும் மிகப்பழங்காலத்து இவ்விதமே கொண்டிருந்தனவென்றும் அவர் விவரிக்கிறார்.

இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் குறித்த முல்லைத் தீம்பாணி என்பது இக்காலத்தில் மோகனம் என்ற பெயரால் வழங்கப்படும் ஐந்திசைப்பண்ணே ஆதல் வேண்டும் என இந்நூலாசிரியர் பல்வேறு காரணங்களைக் காட்டி முடிவு காண்கிறார்.

**சங்ககால இசை :**

பண்ணுராய்ச்சி வித்தகர் குடந்தை ப. சுந்தரேசன் ''சங்ககால இசை'' என்னும் சிறிய நூலில் சங்க காலத்தில் வழக்கில் இருந்த ஐம்புழைக்குழல், ஏழ்புழைக்குழல் என இருவகைப்படும் குழல்கள், வில்யாழ் போன்ற யாழ் வகைகள், ஏழுபெரும்பாலைப் பண்கள், முதலைந்திசை முதலியவற்றை விளக்கி இருக்கிறார். ''தமிழிசைப் பண்கள்'', ''நட்டபாடைப்பண்'', ''ஓரேழ் பாலை'' என்னும் தலைப்புகளில் கட்டுரைகளையும் ''இசைத்தமிழ்ப் பயிற்சி நூல்'' என்னும் சிறிய நூலையும் இவர் இயற்றியுள்ளார்.

**இசையியல் :**

சங்கீத கலாநிதி க. பொன்னையா பிள்ளையவர்கள் இயற்றிய இந்த நூலை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1944ம் ஆண்டு வெளியிட்டுள்ளது.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தீட்சிதரின் சீடர்களான தஞ்சை பொன்னையா, சின்னையா, சிவானந்தம், வடிவேல் என்னும் பெரியார்கள் அநேக தானவர்ணங்கள், பதவர்ணங்கள், ஜதிசுரங்கள், கீர்த்தனங்கள் முதலியவற்றை இயற்றி அருந்தொண்டு புரிந்துள்ளனர். இவர்களுடைய பரம்பரையில் தோன்றிய க. பொன்னையா பிள்ளை அவர்களும் பல வர்ணங்கள், சுரஜதிகள், தமிழ்ப்பாடல்கள் முதலியவற்றை இயற்றி யுள்ளார்கள்.

இந்நூலில் இசை இலக்கணங்கள் மிக எளிய முறையில் விளக்கப்பட்டு உள்ளன. சுரங்கள், பண்கள், தாளங்கள் முதலியவற்றின் வகைகள், பல்வேறு

இசைக்கருவிகளின் அமைப்புகள், இசைப் பாடல்களின் பல்வேறு வகைகள், இராகங்களின் இலக்கண நுட்பங்கள், கருநாடக இராகங்களுக்கும், தேவாரப் பண்களுக்கும் உள்ள ஒப்புமை முதலியவை இந்நூலில் விளக்கமாகத் தெளிவுறுத்தப்பட்டுள்ளன.

**இசைத்தமிழ் :**

பழந்தமிழ் மக்கள் வளர்த்த இசைத்தமிழின் சிறப்பை விவரிக்கும் வகையில் பேராசிரியர் வெள்ளைவாரணனார் இந்நூலை இயற்றியுள்ளார். பழந்தமிழ் மக்கள் பாடிய நூற்றுமூன்று பண்கள், தேவாரத் திருப்பதிகங்கள் பாடப்பெற்ற பண்கள் முதலிய விவரங்கள் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன.

**சிலப்பதிகாரத்து இசைத்தமிழ் :**

அரும்பதவுரை, அடியார்க்குநல்லார் உரை ஆகியவற்றின் துணை கொண்டு சிலப்பதிகாரத்திலுள்ள இசைப்பகுதிகளை முழுவதுமாக ஆராய்ந்து, தாம் கண்ட உண்மைகளை டாக்டர். எஸ். இராமநாதன் இந்நூலில் அளித்துள்ளார்.

**நமதுபணி :**

பழந்தமிழர்களாகிய நம் முன்னோர்கள் நமக்குக் கொடுத்திருக்கிற இசைச்செல்வங்களும் பழம் இசைக்கருவிகளும் எண்ணிறந்தன. இசைத் தமிழையும் நமது பண்டை இசைக்கருவிகளையும் பாதுகாத்துப் போற்றி வருதல் நம் அனைவரின் கடமையாகும். அருமையான கருத்துள்ள பல புதிய தமிழ்ப் பாடல்களுக்கு இசை இலக்கணமும் மரபுநெறியும் பிறழாமல் புதிய இராகங்களில் இசை அமைப்பது நல்லது. அதுவே இசைத்தமிழுக்கு நாம் செய்யும் சிறந்த பணியாகும்.

---

1. கூத்து என்பது நாட்டியம், அபிநயம், நடிப்பு ஆகிய மூன்றும் சேர்ந்த கலையைக் குறிக்கிறது.

2. ஆதாரம் : பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் இயற்றிய ''இசைத்தமிழ்'' என்னும் நூல். (பக்கம் 150)

3. ஆதாரம் : புலவர் மு. சண்முகம்பிள்ளை இயற்றிய ''நிகண்டு சொற்பொருட் கோவை'' மதுரை காமராசர் பல்கலைக்கழக வெளியீடு.

4. சென்னைப் பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவர் டாக்டர். எஸ். சீதா அவர்கள் 1979-ஆம் ஆண்டு தமிழிசைச்சங்கம் பண் ஆராய்ச்சிக் கூட்டத்தில் வாசித்தளித்த கட்டுரையிலும், இதே ஆண்டு பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் தமிழிசைச் சங்கத்தின் பண் ஆராய்ச்சிக்கூட்டத்தைத் துவக்கி வைத்து அளித்த தொடக்கவுரையிலும் இக்கருத்து விளக்கப்பட்டுள்ளது.

5. பாணர்களின் சிறப்பு சிலப்பதிகாரத்தில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

''குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும்
வழுவின்றிசைத்து வழித்திறம் காட்டும்
அரும்பெரும் மரபிற் பெரும்பாண் இருக்கையும்''

( —சிலப்பதிகாரம்—இந்திரவிழவூரெடுத்த காதை அடிகள் 35-37)

6. சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் செய்யுள் அடி 26-இல் ''யாழும் குழலும் சீருமிடறும்....'' என்னும் அடிக்கு அடியார்க்கு நல்லார் எழுதியிருக்கும் உரையில் இவ்வாறு குறிப்பிட்டிருக்கிறார்.

''யாழ் நால்வகைப்படும். அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டி யாழ் என்பன. இவை நான்கும் பெரும்பான்மை சிறுபான்மையான் வருவனவுமுள, என்னை?''

7. இளங்கோவடிகளுக்குத் தமையனை சேரன் செங்குட்டுவன் பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்குக் கோயில் சமைத்து விழாக் கொண்டாடிய காலத்தில் இலங்கையில் கயவாகு என்ற அரசன் இருந்தான் என்று இலக்கியச் சான்றுகள் கூறுகின்றன. இன்றைக்குச் சற்றேறக்குறைய 1860 வருடங்களுக்கு முன்பு கயவாகு அரசன் இலங்கையை ஆண்டு வந்தான் என்று சரித்திர வாயிலாகத் தெரியவந்துள்ளது. இவன் முதற்கயவாகு என்று அழைக்கப்பட்டான். இளங்கோவடிகளின் காலம் முதற்கயவாகுவின் காலமென்றே கருதப்படுகிறது.

ஆதாரம்: உ. வெ. சாமிநாதய்யரால் பதிப்பிக்கப்பெற்ற சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லாருரையும்.

8. ஆதாரம்: பேராசிரியர் மு. அருணாசலம் அவர்கள் இயற்றிய தமிழ் இலக்கிய வரலாறு ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பாகம். பக்கம் 313 முதல்.

---

# 3

# ஏழு சுரங்கள்

இசைக்குரிய சுரங்கள்[1] ஏழாகும். ஒரு ஸ்தாயியில் (Octave) ஏழு முழு சுரங்கள்[2] உள்ளன. இவைகள் சட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்று அழைக்கப்படுகின்றன. இவற்றை முறையே ச, ரி, க, ம, ப, த, நி என்று சுருக்கமாகக் குறிப்பிடுகிறோம்.

பழந்தமிழ் மக்கள் இந்தச் சுரங்களை குரல், துத்தம், கைக்கிளை, உழை இளி, விளரி, தாரம் என்று அழைத்தார்கள். ஒரு ஸ்தாயியை இயக்கு[3] என்றும் தானநிலை[4] என்றும் குறிப்பிட்டனர். ஒரு ஸ்தாயியை பழந்தமிழ் மக்கள் மண்டிலம்[5] என்றும் அழைத்தனர்.

**மூவகை இயக்கு :**

மெலிவு, சமன், வலிவு என இயக்குகள் (ஸ்தாயிகள்) மூன்று வகைப்படும். இம்மூன்றையும் தற்காலம் முறையே மந்த்ர ஸ்தாயி, மத்ய ஸ்தாயி, தார ஸ்தாயி என்று வழங்குகிறோம். மந்த்ர ஸ்தாயி தக்கு ஸ்தாயி அல்லது கீழ்ஸ்தாயி என்றும் அழைக்கப்படுகிறது. தாரஸ்தாயி ஹெச்சுஸ்தாயி என்றும் அழைக்கப்படுகிறது.

ச் ரி க்
கு து கை

வலிவியக்கு
(தாரஸ்தாயி)

ச ரி க ம ப த நி
கு து கை உ இ வி தா

சமனியக்கு
(மத்யஸ்தாயி)

ம ப த நி
உ இ வி தா

மெலிவியக்கு
(மந்த்ர ஸ்தாயி)

மெலிவியக்கு சுரங்களுக்குக் கீழே புள்ளியும், வலிவியக்குச் சுரங்களுக்கு மேலே புள்ளியும் இருக்கும். சமனியக்கு சுரங்களுக்கு மேலேயாவது, கீழேயாவது புள்ளிகள் இருக்காது.

பண்டைக்காலத்தில் சகோட யாழில் நரம்புகள் மெலிவு இயக்கிலுள்ள உழை முதல் வலிவு இயக்கிலுள்ள கைக்கிளை வரை[6] கட்டப்பட்டிருந்தன என்று காண்கிறோம்.

**ஆரோசை, அமரோசை :**

ஏழு சுரங்களும் ஒன்றுக்கு மேல் ஒன்றாக உயர்ந்துகொண்டு போகும் அமைப்பிற்கு ஆரோகணம் என்று பெயர். அவ்வாறே அவை ஒன்றன்பின் ஒன்றாக இறங்கிவரும் அமைப்பிற்கு அவரோகணம் என்று பெயர். ஏழிசைகளும் படிப்படியாக மேன்மேல் உயர்ந்து செல்லும் இசை நிரலை ''ஆரோசை'' எனவும், படிப்படியாகத் தாழ்ந்து செல்லும் இசை நிரலை ''அமரோசை'' எனவும் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்[7].

**பன்னிரு சுர நிலைகள்:**

ஏழு சுரங்களில் குரலுக்கும் (சட்ஜம்) இளிக்கும் (பஞ்சமம்) பேதம் கிடையாது. மற்ற ஐந்து சுரங்கள் ஒவ்வொன்றிற்கும் நிறை, குறை என்ற இரண்டு பேதங்கள் உண்டு. இந்த பேதங்களைத் தீவ்ரம் கோமளம் என்று இப்பொழுது குறிப்பிடுகிறோம். குரல் (ச) இளி (ப) ஆகிய இரண்டு சுரங்களுக்கு இரண்டு நிலைகளும் (ஸ்தானங்கள்). துத்தம் (ரி) கைக்கிளை (க) உழை (ம), விளரி (த) தாரம் (நி) ஆகிய ஐந்து சுரங்களுக்கு $5 \times 2 = 10$

நிலைகளும் (ஸ்தானங்கள்) உள்ளன. ஆக மொத்தம் ஓர் இயக்கில் பன்னிரு சுரநிலைகள் உள்ளன.

தீவ்ர சுரத்தை நிறைசுரம்[8] என்றும், வன்சுரம் என்றும் குறிப்பிடுகிறோம். கோமள சுரத்தை குறைசுரம் என்றும் மென்சுரம் என்றும் குறிப்பிடுகிறோம். உதாரணமாக, சுத்த ரிஷபத்தை குறை துத்தம் என்றும், சதுச்ருதி ரிஷபத்தை நிறைதுத்தம் என்றும் கூறலாம்.

பன்னிரு சுரநிலைகளையும் இவ்வாறு வரிசைப்படுத்தலாம்.

1. குரல்—சட்ஜம்—ச
2. குறைதுத்தம்—கோமள ரீ அல்லது சுத்த ரிஷபம்—ரி[1]
3. நிறைதுத்தம்—தீவ்ர ரீ அல்லது சதுச்ருதி ரிஷபம்—ரி[2]
4. குறை கைக்கிளை—கோமள க அல்லது சாதாரண காந்தாரம்—க[1]
5. நிறை கைக்கிளை—தீவ்ர க—அல்லது அந்தர காந்தாரம்—க[2]
6. குறை உழை—கோமள ம—அல்லது சுத்த மத்யமம்—ம[1]
7. நிறை உழை—தீவ்ர ம—அல்லது பிரதி மத்யமம்—ம[2]
8. இளி—பஞ்சமம்—ப
9. குறை விளரி—கோமள த அல்லது சுத்த தைவதம்—த[1]
10. நிறை விளரி—தீவ்ர த அல்லது சதுச்ருதி தைவதம்—த[2]
11. குறை தாரம்—கோமள நி—அல்லது கைசிகி நிஷாதம்—நி[1]
12. நிறை தார்ரம்—தீவ்ர நி அல்லது காகலி நிஷாதம்—நி[2]

பேதமற்ற சுரங்களாகிய ச, ப பிரக்ருதி சுரங்களென்றும், பேதங்களுடைய சுரங்களாகிய ரி, க, ம, த, நி விக்ருதி சுரங்களென்றும் அழைக்கப்படுகின்றன.

**ஓர் இயக்கிலுள்ள பன்னிரு சுரநிலைகளையும் பழந்தமிழ் மக்கள் கண்டுபிடித்த விதம்:**

ஓர் இயக்கிலுள்ள பன்னிரு சுரநிலைகளையும் பழந்தமிழ் மக்கள் எவ்வாறு கண்டுபிடித்தனர் என்று சிலப்பதிகாரம் நூலில் விரிவாகக் கூறப்பட்டு உள்ளது.

''வரன்முறை மருங்கின் ஐந்தினும் ஏழினும்
உழை முதலாகவும் உழையீறாகவும்
குரல் முதலாகவும் குரலீறாகவும்''

(சிலப்பதிகாரம்—வேனிற்காதை—36-38 அடிகள்)

குரல்—இளி, குரல்—இளி (ச—ப, ச—ப) முறையாகவும், குரல்—உழை, குரல்—உழை (ச—ம, ச—ம) முறையாகவும் அவர்கள் ஓர் இயக்கிலுள்ள பன்னிரு சுரநிலைகளையும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

குரலுக்கு இளி கண்டுபிடித்து, அதன்பின் இளியைக் குரலாக (ஆதார சுருதியாக) வைத்து அதற்கு இளி கண்டுபிடித்து, இப்படியே இளி கண்டு பிடித்துக்கொண்டுபோக ஓர் இயக்கிலுள்ள பன்னிரு சுரநிலைகளும் கிடைக்கும்.

அரங்கேற்று காதையில் குழலோனின் அமைதியைக் கூறும் ஆசிரியர், குழலோன் குரல் இளி சேரும் சரியான ஒலியை உணர்ந்தவனாக இருந்தான் என்று குறிப்பிட்டுள்ளார்.

''ஏற்றிய குரலிளியென்றிரு நரம்பி
னொப்பக் கேட்குமுணர் வினனாகி''

(சிலப்பதிகாரம்: அரங்கேற்று காதை 59, 60 அடிகள்)

குரல்—இளி முறையில் சுரங்களைக் கண்டுபிடிப்பது வலமுறை அல்லது ஆரோசை முறையாகும்.

**குரல்—இளி முறையில் கிடைக்கும் பன்னிரு சுரங்கள் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | குரலுள் இளி | — | ச ப |
| 2. | இளியுள் துத்தம் | — | ப ரி$^{2}$ |
| 3. | துத்தத்துள் விளரி | — | ரி$^{2}$ த$^{2}$ |
| 4. | விளரியுள் கைக்கிளை | — | த$^{2}$ க$^{2}$ |
| 5. | கைக்கிளையுள் தாரம் | — | க$^{2}$ நி$^{2}$ |
| 6. | தாரத்துள் உழை | — | நி$^{2}$ ம$^{2}$ |
| 7. | உழையுள் துத்தம் | — | ம$^{2}$ ரி$^{1}$ |
| 8. | துத்தத்துள் விளரி | — | ரி$^{1}$ த$^{1}$ |
| 9. | விளரியுள் கைக்கிளை | — | த$^{1}$ க$^{1}$ |
| 10. | கைக்கிளையுள் தாரம் | — | க$^{1}$ நி$^{1}$ |
| 11. | தாரத்துள் உழை | — | நி$^{1}$ ம$^{1}$ |
| 12. | உழையுள் குரல் | — | ம$^{1}$ ச |

இதேபோல் இடமுறை அல்லது அமரோசை முறையாகக் குரல்—உழை, குரல்—உழை (ச—ம, ச—ம) என்ற முறையில் ஐந்தாவது சுரமாக இடமுறை யாகப் பிடித்துக்கொண்டுவந்தால், ஓர் இயக்கிலுள்ள பன்னிரு சுரங்களும் கிடைக்கப்பெறலாம்.

**குரல்—உழை முறையில் கிடைக்கும் பன்னிரு சுரங்கள் :**

1. உழையுள் குரல் — ம$^{1}$ ச
2. குரலுள் இளி — ச ப
3. இளியுள் துத்தம் — ப ரி$^{2}$
4. துத்தத்துள் விளரி — ரி$^{2}$ த$^{2}$
5. விளரியுள் கைக்கிளை — த$^{2}$ க$^{2}$
6. கைக்கிளையுள் தாரம் — க$^{2}$ நி$^{2}$
7. தாரத்துள் உழை — நி$^{2}$ ம$^{2}$
8. உழையுள் துத்தம் — ம$^{2}$ ரி$^{1}$
9. துத்தத்துள் விளரி — ரி$^{1}$ த$^{1}$
10. விளரியுள் கைக்கிளை — த$^{1}$ க$^{1}$
11. கைக்கிளையுள் தாரம் — க$^{1}$ நி$^{1}$
12. தாரத்துள் உழை — நி$^{1}$ ம$^{1}$

பழங்காலத்திலிருந்த சகோட யாழில் எவ்வாறு பதினான்கு நரம்புகள் இருந்தன என்றும், இதில் உழை குரலாகவும், கைக்கிளை தாரமாகவும் வைக்கப்பட்டன என்றும் நாம் கண்டோம். இந்தப் பதினான்கு சுரங்களின் அமைப்பு இவ்வாறு இருந்தது.

ம ப த நி ச ரி க ம ப த நி ச ரி க்

இதில் எவ்வாறு பன்னிரு சுரங்களும் பிறக்கின்றன என்று அடியார்க்கு நல்லார் தமது உரையில் இவ்வாறு கூறுகின்றார்.

''தாரத்துட் டோன்றுமுழை யுழையுட்டோன்று
மோருங் குரல் குரலினுட்டோன்றிச்—சேருமிளி
யுட்டோன்றுந் துத்தத்துட்டோன்றும் விளரியுட்
கைக்கிளை தோன்றும் பிறப்பு''.

(சிலப்பதிகாரம்—வேனிற்காதை அடி 31, 32
அடியார்க்கு நல்லார் உரை.)

குறைதாரம் (நி$^{1}$) இங்கு ஆதார சுரமாக எடுத்துக் கொள்ளப்பட்டு அதிலிருந்து குரல்—இளி (ச—ப) முறையாய் எவ்வாறு பன்னிரு சுரங்களும் கிடைக்கின்றன என உரையாசிரியர் விளக்கியிருக்கிறார்.

குரல்—இளி முறையில் இவ்வாறு பன்னிரு சுரங்கள் பிறக்கின்றன.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | தாரத்தில் | (நி) | உழை | (ம) | தோன்றும் — | $நி^1$ $ம^1$ |
| 2. | உழையில் | (ம) | குரல் | (ச) | தோன்றும் — | $ம^1$ ச |
| 3. | குரலில் | (ச) | இளி | (ப) | தோன்றும் — | ச ப |
| 4. | இளியில் | (ப) | துத்தம் | (ரி) | தோன்றும் — | ப $ரி^2$ |
| 5. | துத்தத்தில் | (ரி) | விளரி | (த) | தோன்றும் — | $ரி^2$ $த^2$ |
| 6. | விளரியில் | (த) | கைக்கிளை | (க) | தோன்றும் — | $த^2$ $க^2$ |
| 7. | கைக்கிளையில் | (க) | தாரம் | (நி) | தோன்றும் — | $க^2$ $நி^2$ |
| 8. | தாரத்தில் | (நி) | உழை | (ம) | தோன்றும் — | $நி^2$ $ம^2$ |
| 9. | உழையில் | (ம) | துத்தம் | (ரி) | தோன்றும் — | $ம^2$ $ரி^1$ |
| 10. | துத்தத்தில் | (ரி) | விளரி | (த) | தோன்றும் — | $ரி^1$ $த^1$ |
| 11. | விளரியில் | (த) | கைக்கிளை | (க) | தோன்றும் — | $த^1$ $க^1$ |
| 12. | கைக்கிளையில் | (க) | தாரம் | (நி) | தோன்றும் — | $க^1$ $நி^1$ |

**ஓர் இயக்கிலுள்ள (ஸ்தாயி) பன்னிரு சுரங்களும் 16 சுரங்களாய் வழங்கி வருவதைக் காட்டும் அட்டவணை.**

| | | |
|---|---|---|
| குரல் | — ச — | சட்ஜம் |
| குறைதுத்தம் | — $ரி^2$ — | சுத்த ரிஷபம் (இரண்டு அலகு ரி) |
| நிறைதுத்தம் | — $ரி^4$ — | சதுர்சுருதி ரிஷபம் (4 அலகு ரி) அல்லது $க^2$—சுத்த காந்தாரம் (2 அலகு க) |
| குறைகைக்கிளை | — $க^4$ — | சாதாரண காந்தாரம் (4 அலகு க) அல்லது $ரி^6$ சட்சுருதி ரிஷபம் (6 அலகு ரி) |
| நிறைகைக்கிளை | — $க^6$ — | அந்தர காந்தாரம் (6 அலகு க) |
| குறை உழை | — $ம^2$ — | சுத்த மத்யமம் (2 அலகு ம) |
| நிறை உழை | — $ம^4$ — | பிரதி மத்யமம் (4 அலகு ம) |
| இளி | — ப — | பஞ்சமம் |
| குறை விளரி | — $த^2$ — | சுத்த தைவதம் (2 அலகு த) |
| நிறை விளரி | — $த^4$ — | சதுர்சுருதி தைவதம் (4 அலகு த) அல்லது $நி^2$—சுத்த நிஷாதம் (2 அலகு நி) |
| குறைதாரம் | — $நி^4$ — | கைசிகி நிஷாதம் (4 அலகு நி) அல்லது $த^6$—சட்சுருதி தைவதம் (6 அலகு த) |
| நிறைதாரம் | — $நி^6$ — | காகலி நிஷாதம் (6 அலகு நி) |

## சுரங்களின் அகார இகார உகார வித்தியாசங்களின் மூலம் சுரபேதங்களைக் காண்பிக்கும் முறை :

சுர எழுத்துக்களின் அகார இகார உகார வித்தியாசங்களைக் கொண்டு சுரங்களின் பேதங்கள் இவ்வாறு காண்பிக்கப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| சட்ஜம் | — | ச |
| சுத்த ரிஷபம் | — | ர |
| சதுர்சுருதி ரிஷபம் | — | ரி |
| சட்சுருதி ரிஷபம் | — | ரு |
| சுத்த காந்தாரம் | — | க |
| சாதாரண காந்தாரம் | — | கி |
| அந்தர காந்தாரம் | — | கு |
| சுத்த மத்யமம் | — | ம |
| பிரதி மத்யமம் | — | மி |
| பஞ்சமம் | — | ப |
| சுத்த தைவதம் | — | த |
| சதுர்சுருதி தைவ்தம் | — | தி |
| சட்சுருதி தைவதம் | — | து |
| சுத்த நிஷாதம் | — | ந |
| கைசிகி நிஷாதம் | — | நி |
| காகலி நிஷாதம் | — | நு |

---

1. (ஸ்வ)யம்+(ரஞ்)சகம்=ஸ்வ+ரஞ்=ஸ்வரம்சுயமாக ரஞ்சகத்தை உடையது ஸ்வரம் என்று ஆகியது என ''சங்கித சாரம்'' முதல் நூலில் (பக்கம் 2) பேராசிரியர் ஆர். வி. கிருஷ்ணன் கூறியிருக்கிருர்.

2. சுரம் என்ற சொல்லிற்கு கோவை என்னும் சொல் பெரிதும் ஏற்றது என டாக்டர் வீ.ப.கா. சுந்தரம் ''இசைத்துறைத்தமிழ்ச்சொற்கள்'' என்ற நூலில் கூறியிருக்கிறார். சுரங்கள் கோக்கப்படுவதால் 'கோவை' எனப்பெயர் பெற்றது. யாழின் நரம்பில் சுரம் பிறந்ததால் சுரத்தை நரம்பு எனவும் பழந்தமிழ் மக்கள் அழைத்தனர்.

3. ''மூவகை யியக்கி முறையுளிக் கழிப்பி'' என்னும், சிலப்பதிகாரம் வேனிற் காதை 42-வது அடிக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில் ''வலிவு, மெலிவு, சமனுமென்னும் மூவகைப்பட்ட சுருதியும் நிற்கும் நிலையிலே....'' என்று குறிப்பிட்டுள்ளார்.

4. ''வலிவு, மெலிவு, சமனுமெல்லாம்'' என்னும் சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதை 93ஆவது அடிக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில் ''இப்படியாய் வலிவும், மெலிவும், சமனுமெனப்படா நின்ற தான நிலையினை'' என்று கூறியிருக்கிறார்.

5. ஆதாரம்: சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை அடி 17, அடியார்க்கு நல்லார் உரை. ''வட்டம் என்பது வகுக்கும் காலை ஓர் ஏழ்தொடுத்த மண்டிலம் ஆகும்''.

6. சிலப்பதிகாரம் வேனிற்காதை 31, 32 அடிகள்

''பிழையா மரபின் ஈரேழ் கோவையை
உழை முதற் கைக்கிளை யிறுவாய்க்கட்டி''

அடியார்க்கு நல்லார் இவ்வாறு உரை தந்துள்ளார்

''மயங்கா மரபினையுடைய இப்பதினாற் கோவையாகிய
சகோடயாழை உழை குரலாகக் கைக்கிளை தார்மாகக்
கட்டியென்க.''

7 ஆதாரம் : பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் இயற்றிய இசைத்தமிழ் என்னும் நூல் *(பக்கம் 25)*.

8. ஆதாரம் : ''பெருகியன் மருதம் பேணுங்காலை
அகநிலைக்குரிய நரம்பின திரட்டி
நிறை குறை கிழமை பெறுமென மொழிப''

*(சில. 8 : 39—அடியார்க்கு நல்லார் உரை)*



# 4

# பண்

பாட்டு என்பது இசையில் உள்ள இயல்பகுதி. பாட்டை உருப்படி என்றும் சொல்லுகிறோம். பாட்டைப் பாடுவதற்கு அமைந்த இராகம் பண்ணாகும். பழந்தமிழ் மக்கள் இராகத்தைப் பண் என்று அழைத்தனர்.

**பண் பிறக்கும் இடமும் முயற்சியும் :**

பண் பிறக்கும் இடங்கள் எட்டு ஆகும்[1]. அவை பெருந்தானங்கள் என்று சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளன. நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணாக்கு, உதடு, பல், தலை என்ற எட்டும் பெருந்தானங்களாகும். இந்த உறுப்புகளின் உதவியைக் கொண்டு பண்ணைப் பாடவேண்டும். எடுத்தல்; படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்பன எட்டு கிரியைகளாகும். இவை பண்ணைப் பாடும்போது உண்டாகும் முயற்சிகள் ஆகும்.

பெருந்தானம் எட்டிலும் கிரியைகள் எட்டாலும் பண்ணிப்படுத்தலால் பண்ணென்று பெயராயிற்று.

**பண்ணின் வகைகள் :**

ஆரோசையிலும் அமரோசையிலும் ஏழு சுரங்களும் வருகின்ற சம்பூரண இராகம் சிறப்பாகப் 'பண்' என்று அழைக்கப்பட்டது. ஆறு சுரங்கள் கொண்ட இராகம் பண்ணியம் அல்லது பண்ணியல் என்றும், ஐந்து சுரங்கள் வரும் இராகம் திறம் என்றும், நான்கு சுரங்கள் வரும் இராகம் திறத்திறம் என்றும் அழைக்கப்பட்டன[2]. இவை முறையே ஷாடவம், ஔடவம்,

சுராந்தரம் (சதுர்த்தம்) என்று தற்காலம் அழைக்கப்படுகின்றன[3]. எல்லா விதமான பண்களையும் பொதுவாகப் ''பண்'' என்று அழைத்தனர் என்றும் தெரிகிறது.

**பண்ணுப்பெயர்த்தல் :**

பழந்தமிழ் மக்கள் ஓர் இயக்கில் உள்ள குரல், துத்தம், கைக்கிளை முதலிய ஒவ்வொரு சுரத்தையும் குரலாக வைத்து (ஆதார சுருதியாக) ஏழு பெரும்பாலைப் பண்களையும், ஐந்து அரை சுரங்களைக் குரலாக (ஆதார சுருதியாக) வைத்து ஐந்து சிறிய பாலைப் பண்களையும் வகுத்தனர். இந்த முறையைப் ''பண்ணுப் பெயர்த்தல்''[4] என்று அழைத்தனர்.

பண்ணுப் பெயர்த்தல் என்னும் குரல் திரிபு முறையை நாம் இப்பொழுது ''கிரகபேதம்'', ''கிரகசுரபேதம்'', ''சுருதிபேதம்'' முதலிய சொற்றொடர்களால் அழைக்கிறோம். ஐரோப்பிய இசைமுறையில் இதை **"Modal shift of tonic"** என்று அழைக்கின்றார்கள்.

**ஏழு பெரும்பாலைப் பண்கள் :**

1. குரலே குரலாக [ஆதார சுருதி] வரும்பொழுது பிறப்பது செம்பாலைப்பண்.
2. துத்தம் குரலாக வரும்பொழுது பிறப்பது படுமலைப் பாலைப்பண்.
3. கைக்கிளை குரலாக வரும்பொழுது பிறப்பது செவ்வழிப் பாலைப்பண்.
4. உழை குரலாக வரும்பொழுது பிறப்பது அரும்பாலைப்பண்.
5. இளி குரலாக வரும்பொழுது பிறப்பது கோடிப்பாலைப்பண்.
6. விளரி குரலாக வரும்பொழுது பிறப்பது விளரிப்பாலைப்பண்.
7. தாரம் குரலாக வரும்பொழுது பிறப்பது மேற்செம்பாலைப்பண்.

**ஐந்து சிறுபாலைப்பண்கள் :**

இதேபோல் ஐந்து அரைச் சுரங்களையும் குரலாக (ஆதார சுருதியாக) வைத்து பழந்தமிழர் ஐந்து சிறுபாலைப் பண்களையும்[5] வகுத்தனர்.

பழந்தமிழர் கண்டுபிடித்த பன்னிரு பாலைகளையும் தாரக்கிரமம், குரற்கிரமம், இளிக்கிரமம், முதலிய பல்வேறு கிரமங்களில் இசைத்து வந்தனர் எனக்காண்கிறோம். நூற்றுமூன்று பண்கள் ஏழுபெரும்பாலைப் பண்களில் இருந்து தோன்றின என்று அடியார்க்கு நல்லார் கூறியிருக்கிறர்[6]. பன்னிரு பாலைப் பண்களிலும் பண்ணியல், திறம், திறத்திறம் என்ற பேதங்களால் பல ஆயிரக்கணக்கான பண்களை உருவாக்கி பழங்காலத்தில் தமிழ் மக்கள் பாடி வந்தனர் என்று அறிகிறோம்.

**காலத்திற்கு ஏற்ற பண்கள் :**

பழங்காலத்தில் மருதப்பண் காலையில் பாடப்பட்டது என்றும், செவ்வழிப்பண் மாலையில் பாடப்பட்டது என்றும் தெரிகிறது. புறநானூற்றி லுள்ள ஒரு பாடலில் இது குறிப்பிடப்பட்டுள்ளது[7]. புறநானூறு பண்டைத் தமிழ் மக்களின் அரசியல், சமூக வாழ்க்கையைச் சித்திரிக்கும் அரிய கருவூல மாகத் திகழ்கின்றது. பண்டைக்காலத்தில் வாழ்ந்த பேரரசர்களையும், சிற்றரசர்களையும், வீரர்களையும் மக்களின் சமூகப்பழக்கவழக்கங்களையும் இப்பாடல்கள் அழகாக எடுத்துச் சொல்லுகின்றன.

கண்டீரம் என்னும் இடத்தில் நள்ளியென்ற சிற்றரசன் ஆண்டு வந்தான். அவன் இசையில் வல்ல பாணர்களை ஆதரித்து வந்தான். நள்ளியைப் பார்த்து வன்பரணர் என்னும் புலவர் பாடியதாகப் பாடல் அமைந்துள்ளது. ''நள்ளியே நீ வாழ்க! பாணர்கள் மாலையில் மருதப்பண்ணை வாசித்தும், காலையில் செவ்வழிப்பண்ணை வாசித்தும், இவ்வாறு இசை மரபை மறந்து விட்டனர். அதற்குக் காரணம் விருந்தளித்த உன்னுடைய வள்ளன்மைதான்'' என்று புலவர் பாடியிருக்கிறார்.

மாதவி செவ்வழிப்பண்ணையும், விளரிப்பண்ணையும்[8] மாலை நேரத்திலே யாழிலே வாசித்தாள் எனச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது. மாலை நேரம் வந்ததை இளங்கோவடிகள் இவ்வாறு வர்ணித்துள்ளார்.

> ''கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே''
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
>
> கானல் வரி அடி. 41

செவ்வழிப்பண்ணையும், விளரிப்பண்ணையும் மாதவி வாசித்ததை இவ்வாறு அவர் குறிப்பிடுகிறார்.

> ''ஆங்கனம் பாடிய வாயிழை பின்னருங்
> காந்தண் மெல்விரற் கைக்கிளை சேர்குரல்

தீந்தொடைச் செவ்வழிப்பாலையிசை யெழீஇப்
பாங்கினிற் பாடியோர் பண்ணுப் பெயர்த்தாள்.

கானல் வரி அடி. 47

''நுளையர் விளரி நொடிதரும் தீம்பாலை
யிளி கிளையிற் கொள்ள விறுத்தாயான் மாலை
யிளி கிளையிற் கொள்ள விறுத்தாய் மன்னியேற்
கொளவல்லா யென்னாவி கொள் வாழி மாலை.''

கானல் வரி அடி. 48

---

1. ''பாவோடணைதல் இசையென்றார் பண்ணென்றார்
மேவார் பெருந்தானம் எட்டாலும்—பாவாய்
எடுத்தல் முதலாய் இருநான்கும் பண்ணிப்
படுத்தமையால் பண் என்று பார்''

—(சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை அடி 26 —அடியார்க்கு நல்லார் உரை)

2. ''பண்ணென்பது நரப்படைவால் நிறந்தோன்றப்பண்ணப்படாநின்ற பண்ணும்
பண்ணியற்றிறமும் திறமும், திறத்திறமும் என்றவாறு''

—(சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை செய்யுள் அடி 46 —அடியார்க்கு நல்லார் உரை)

3. ''பண், பண்ணியம், திறம், திறத்திறம் என்னுமிவை சம்பூரணம், சாடவம்,
ஔடவம், சதுர்த்தம் என வடமொழிப் பெயரானும் வழங்கும்.''

—(சிலப்பதிகாரம் புறஞ்சேரி செய்யுள் அடி 106 —அடியார்க்கு நல்லார் உரை)

4. ''தீந்தொடை நரம்பின் பாலை வல்லோன்
பையுளுறுப்பிற் பண்ணுப் பெயர்த்தாங்குச்'' (— பதிற்றுப்பத்து 65-14, 15.)

''பாணர் கையது பணிதொடை நரம்பின்
விரல் கவர் பேரியாழ் பாலை பண்ணிக்'' (— பதிற்றுப்பத்து 57-7, 8,)

''புரி நரம்பின் கொளைப்புகல் பாலையேழும்
எழூப்புணர் யாழுமிசையுங் கூடக்'' (— பரிபாடல் 7:77.)

''குரல் குரலாயது செம்பாலைப்பண்
துத்தம் குரலாயது படுமலைப்பாலைப்பண்
கைக்கிளை குரலாயது செவ்வழிப்பாலைப்பண்
உழை குரலாயது அரும்பாலைப்பண்
இளி குரலாயது கோடிப்பாலைப்பண்
விளரி குரலாயது விளரிப்பாலைப்பண்
தாரம் குரலாயது மேற்செம்பாலைப்பண்
யென வரன்முறையே ஏழுபாலையும் கண்டுகொள்க''

(சிலப்பதிகாரம். ஆச்சியர் குரவை—எடுத்துக்காட்டு அடிகள் 7, 8
அடியார்க்கு நல்லார் உரை.)

5. ஆதாரம் : ''அந்தரமைந்து நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க''
— சிலப்பதிகாரம்—வேனிற்காதை அடி 35 —அடியார்க்கு நல்லார் உரை

ஆதாரம் : அருட்டிரு விபுலானந்த அடிகளார் இயற்றிய ''யாழ் நூல்''
— பாலைத்திரிபியல் — பக்கம் 109.

6. ''இவ்வேழு பெரும்பாலையினையும் முதலடுத்து நூற்றுமூன்று பண்ணும் பிறக்கும்''
—(சிலம்பதிகாரம் —வேனிற்காதை —அடி 35, அடியார்க்கு நல்லார் உரை)

7. புறநானூறு, பாடல் எண் 149. கண்டீரக்கோப்பெரு நள்ளியை வன்பரணர் பாடியது.

''நள்ளி வாழியோ! நள்ளி! நள்ளென்
மாலை மருதம் பண்ணி, காலை
கைவழி மருங்கில் செவ்வழி பண்ணி,
வரவு எமர் மறந்தனர்—அது நீ
புரவுக்கடன் பூண்ட வண்மையானே''

8. டாக்டர் சேலம் எஸ். ஜெயலட்சுமி எழுதியுள்ள ''தமிழிசை மரபு'' என்னும் கட்டுரையில் செவ்வழிப்பண்ணும் விளரிப்பண்ணும் மாலையில் பாடப்பட்டன என்றும், அவை இரங்கற்றன்மை உடையனவாய் இருந்தன என்றும் குறிப்பிட்டுள்ளார்.

—

# 5

# நூற்று மூன்று பண்கள்

இசை நுணுக்கம், இந்திர காளியம், பரதசேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் போன்ற பழைய இசை நூற்கள் அழிந்து போயினும் அவைகளைப்பற்றி அடியார்க்குநல்லார் போன்ற உரையாசிரியர்கள் மேற்கோள்களாகக் காட்டியிருக்கும் ஒரு சில குறிப்புகள் நமக்குக் கிடைத்து உள்ளன. இவற்றின்மூலம் பழந்தமிழ் மக்கள் எவ்வாறு இசைத் தமிழில் மிகத் தேர்ச்சி பெற்றுச் சிறந்து விளங்கினர் என்பதை நாம் ஊகிக்கமுடிகிறது. அவர்கள் வழக்கிலிருந்த நூற்று மூன்று பண்களைப் பற்றிய விவரங்களைச் சில பழம் நூல்கள் மூலம் நாம் அறிந்துகொள்ளுகிறோம்.

**பஞ்சமரபு கூறும் பண்கள் :**

கடைச்சங்க காலத்தைச் சேர்ந்த அறிவனார்[1] இயற்றிய ''பஞ்சமரபு'' என்னும் நூல் உரையில் பழந்தமிழ் மக்கள் வழக்கிலிருந்த நூற்று மூன்று பண்கள் பற்றிய விவரங்கள் காணப்படுகின்றன.

**செம்பாலையில் பிறக்கும் பண்கள் :**

குரல் முதலாகத் தாரமீறாக வரும் ஏழிசையில் செம்பாலை கிடைக்கிறது. செம்பாலையில் பிறக்கும் பண்கள்:

| | | | |
|---|---|---|---|
| 1. | பாலையாழ் | 5. | கௌடி |
| 2. | நாகராகம் | 6. | காந்தாரம் |
| 3. | ஆகிரி | 7. | செந்துருத்தி |
| 4. | தோடி | 8. | உதயகிரி |

**படுமலைப்பாலையிற் பிறக்கும் பண்கள் :**

1. சுகதி
2. பெருந்தொகை [பெருந்தகை]
3. நாகத்தொனி
4. சீவணி
5. முல்லை சாதாரி
6. நளுத்தை [இந்தளம்]
7. மேகாஞ்சி [காஞ்சி]
8. வியந்தம்
9. தனுக்காஞ்சி
10. குறண்டி [நோதிறம்]
11. படுமலை
12. படுமலைக்கவ்வாணம்
13. யாமை
14. சாரளபாணி
15. நாட்டம்
16. தாணு
17. வயிரசம்
18. ஆரியவேளர் கொல்லி
19. ஆரியக்குச்சரி
20. கவுசிகம்
21. மாளுவகிரி
22. தராவணி

**செவ்வழிப்பாலையிற் பிறக்கும் பண்கள் :**

1. நட்டராகம்
2. வேடராமக்கிரி
3. நணிடை
4. கொண்டற்கிரி [கொண்டி]
5. நாணுபஞ்சமம்
6. பெயர் திறம்
7. சாவகக்குறிஞ்சி
8. நேர்திறம் [புறநீர்மை]
9. புங்காளி [காளி]
10. சாரல்
11. விபஞ்சி
12. சீகாமரம்

**அரும்பாலையிற் பிறக்கும் பண்கள் :**

1. தக்கராகம்
2. அந்தாளிப்பாடை
3. மருள்
4. முதிர்ந்த விந்தளம்
5. மேகராகக்குறிஞ்சி
6. கொல்லி
7. மன்றல்
8. பஞ்சுரம்
9. பழம்பஞ்சுரம்
10. வியாழக்குறிஞ்சி
11. கொல்லிவராடி
12. பழந்தக்கராகம்
13. வட்டி [துக்க ராகம்]
14. காந்தாரபஞ்சமம்
15. நட்டபாடை [நைவளம்]
16. சோமராகம்
17. சித்திரவேளர்கொல்லி [சாதாளி]
18. குறிஞ்சி
19. மலகரி
20. அந்தாளிக்குறிஞ்சி

21. கேதாளிக்குறிஞ்சி
22. மல்லாரி
23. அத்தராட்டம்
24. சாழுங்கநாட்டை [தேசாக்கிரி]
25. சுத்த காந்தாரம் [சுருதி காந்தாரம்]
26. மேகராகம்

**கோடிப்பாலையிற் பிறக்கும் பண்கள் :**

1. மருதள்ரு
2. சாயை [அரளி]
3. சாங்கிமம்
4. பாதுங்கராகம்
5. தக்கேசி
6. அநுத்திரபஞ்சமம்
7. தத்தளம்
8. தனாசி
9. பாக்கழி
10. கூர்த்த பஞ்சமம்
11. வேளர்கொல்லி
12. தமிழ்க்குச்சரி

**விளரிப்பாலையிற் பிறக்கும் பண்கள் :**

1. இஞதிறம்
2. சாஞகி [சாயரி]
3. தமிழ்வராடி [வராடி]
4. பெரியவராடி
5. சோகவராடி

**மேற்செம்பாலையிற் பிறக்கும் பண்கள் :**

1. தாரப்பண்
2. நாகயாந்தி
3. திவ்விய வராடி
4. சூர்துங்கராகம்
5. முதிர்ந்த குறிஞ்சி
6. சாந்தி
7. அழுங்கு
8. தேசி
9. அந்தி
10. வருணம்
11. ஆநந்தை
12. மவுளி
13. செருந்தி
14. பாடை
15. நள்ளி
16. கூதாளி
17. மாங்கள்ளி
18. பையுள் காஞ்சி

இந்த நூற்று மூன்று பண்களும் பண் (சம்பூரணம்), பண்ணியல் (ஷாடவம்), திறம் (ஔடவம்), திறத்திறம் (சுராந்தரம்) என நான்கு வகைப்படும் என்று பஞ்சமரபு கூறுகிறது. சம்பூரண இராகங்கள் பதினேழு என்றும், பண்ணியல் (ஷாடவம்) எழுபது என்றும், திறம் (ஔடவம்) பன்னிரண்டு என்றும், திறத்திறம் (சுராந்தரம்) நான்கு என்றும் கூறுகிறது.

இந்தப்பண்களின் பெயர்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| பண்கள் | 17 |
| பண்ணியல் திறங்கள் | 70 |
| திறங்கள் | 12 |
| திறத்திறங்கள் | 4 |
| மொத்தம் | 103 பண்கள் |

**பிங்கலந்தை தரும் விவரங்கள் :**

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த பிங்கல முனிவர்[2] எழுதிய பிங்கலந்தை என்னும் நூலில் பழந்தமிழ் மக்கள் பாடி வந்த 103 பண்கள் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

பிங்கலந்தையில்[3] பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்னும் நால்வகை யாழ் பற்றியும் இவைகளில் பிறக்கும் பண்கள் பற்றியும் கூறப்பட்டு உள்ளன.

பாலையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தல் யாழ் [செவ்வழி யாழ்] ஆகிய நான்கு பெரும்பண்களும் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்ற நால்வகை ஜாதி வேறுபாடுகளிலே ஒவ்வொன்றும் நான்காகி மொத்தம் 16 பண்கள் ஆகின்றன.

''ஈரிருபண்ணும் எழுமூன்று திறனும்
ஆகின்றனவிவை யிவற்றுட் பாலையாழ்
தேவதாளி நிருபதுங்க ராகம்
நாகராகம் இவற்றுள் குறிஞ்சியாழ்
செந்துமண்டலியாழ் அரி மருதயாழ்
ஆகரி சாயவேளர் கொல்லி
கின்னரம் செவ்வழி வேளாவளி சீராகம்
சந்தியிவை பதினாறும் பெரும்பண்'' — (சூத்திரம் 1380)

[திருத்தங்களுடன் கூடிய சூத்திரம் — யாழ் நூல் — பக்கம் 148]

## பெரும்பண்கள்—16

| அகநிலை | புறநிலை | அருகியல் | பெருகியல் | |
|---|---|---|---|---|
| 1. பாலையாழ் | 2. தேவதாளி | 3. நிருபதுங்கராகம் | 4. நாகராகம் | 4 |
| 5. குறிஞ்சியாழ் | 6. செந்து | 7. மண்டலியாழ் | 8. அரி | 4 |
| 9. மருதயாழ் | 10. ஆகரி | 11. சாயவேளர் கொல்லி | 12. கின்னரம் | 4 |
| 13. செவ்வழியாழ் | 14. வேளாவளி | 15. சீராகம் | 16. சந்தி | 4 |
| | | | | 16 |

அராகம், நேர்திறம், உறுப்பு, குறுங்கலி, ஆசான் என்பவை பாலையாழ் திறனாகும்.

அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்னும் நான்கு ஜாதியின் கீழ் இந்த 5 திறனில் $5 \times 4 = 20$ பண்கள் பிறக்கின்றன.

### பாலையாழ்த்திறன் ஐந்து—ஜாதி இருபது

| | அகநிலை | புறநிலை | அருகியல் | பெருகியல் | |
|---|---|---|---|---|---|
| அராகம் | 17. தக்கராகம் | 18. அந்தாளி பாடை | 19. அந்தி | 20. மன்றல் | 4 |
| நேர்திறம் | 21. நேர்திறம் | 22. வராடி | 23. பெரிய வராடி | 24. சாயரி | 4 |
| உறுப்பு | 25. பஞ்சமம் | 26. திராடம் | 27. அழுங்கு | 28. தனாசி | 4 |
| குறுங்கலி | 29. சோமராகம் | 30. மேகராகம் | 31. துக்க ராகம் | 32. கொல்லி வாரடி | 4 |
| ஆசான் | 33. காந்தாரம் | 34. சிகண்டி | 35. தேசாக் கிரி | 36. சுருதி காந்தாரம் | 4 |
| | | | | | 20 |

### குறிஞ்சியாழ்த்திறன் எட்டு—ஜாதி முப்பத்திரண்டு

நைவளம், காந்தாரம், பஞ்சுரம், படுமலை, மருள், அயிர்ப்பு, அரற்று, செய்திறம், ஆகியவை குறிஞ்சியாழ் திறத்தின் பெயராகும். (சூத்திரம் அடி 1377)

| | அகநிலை | புறநிலை | அருகியல் | பெருகியல் | |
|---|---|---|---|---|---|
| நைவளம் | 37. நட்டபாடை | 38. அந்தாளி | 39. மலகரி | 40. விபஞ்சி | 4 |
| காந்தாரம் | 41. காந்தாரம் | 42. செருந்தி | 43. கௌடி | 44. உதயகிரி | 4 |
| பஞ்சுரம் | 45. பஞ்சுரம் | 46. பழம் பஞ்சுரம் | 47. மேகராகக் குறிஞ்சி | 48. கேதாளிக் குறிஞ்சி | 4 |
| படுமலை | 49. கௌவாணம் | 50. பாடை | 51. சூர்துங்க ராகம் | 52. நாகம் | 4 |
| மருள் | 53. மருள் | 54. பழந்தக்க ராகம் | 55. திவ்விய வராடி | 56. முதிர்ந்த விந்தளம் | 4 |
| அயிர்ப்பு | 57. அநுத்திர பஞ்சமம் | 58. குச்சரி | 59. அருட்புரி | 60. நாராயணி | 4 |
| அரற்று | 61. குறிஞ்சி | 62. நட்ட ராகம் | 63. இராமக் கிரி | 64. வியாழக் குறிஞ்சி | 4 |
| செந்திறம் | 65. செந்திறம் | 66. தக்கணாதி | 67. சாவகக் குறிஞ்சி | 68. ஆநந்தை | 4 |
| | | | | | 32 |

மருதயாழ் திறத்தின் பெயர் நவிர், வடுகு, வஞ்சி, செய்திறன் ஆகியவையாகும்,

### மருதயாழ்த்திறன் நான்கு—ஜாதி—16

| | அகநிலை | புறநிலை | அருகியல் | பெருகியல் | |
|---|---|---|---|---|---|
| நவிர் | 69. தக்கேசி | 70. கொல்லி | 71. ஆரியக் குச்சரி | 72. நாகதொனி | 4 |
| வடுகு | 73. இந்தளம் | 74. சாதாளி | 75. தமிழ்வேளர் கொல்லி | 76. காந்தாரம் | 4 |
| வஞ்சி | 77. பாக்கழி | 78. தத்தள பஞ்சமம் | 79. மாதுங்க ராகம் | 80. கௌசிகம் | 4 |
| செய்திறம் | 81. பியந்தை | 82. சீகாமரம் | 83. சாரல் | 84. சாங்கிமம் | 4 |
| | | | | | 16 |

செவ்வழி யாழ்த்திறன், நேர்திறம், பெயர்திறம், யாமை, முல்லை என்பவையாகும்.

## செவ்வழியாழ்த்திறன் நான்கு—ஜாதி—16

| | அகநிலை | புறநிலை | அருகியல் | பெருகியல் | |
|---|---|---|---|---|---|
| நேர்திறம் | 85. குறண்டி | 86. ஆரியவேளர் கொல்லி | 87. தனுக் காஞ்சி | 88. வியந்தம் | 4 |
| பெயர்திறம் | 89. யாழ் பதம் | 90. தாளி | 91. கொண் டைக்கிரி | 92. சீவனி | 4 |
| யாமை | 97. யாமை | 94. சாளரபாணி | 95. நாட்டம் | 96. தாணு | 4 |
| முல்லை | 97. முல்லை | 98. சாதாரி | 99. பைரவம் | 100. காஞ்சி | 4 |
| | | | | | 16 |

இந்த 100 பண்களுடன் தாரப்பண்டிறம், பையுள் காஞ்சி, படுமலை என்னும் மூன்று பண்களும் சேர்ந்து மொத்தம் 103 பண்கள் ஆயின.

நூற்று மூன்று பண்களின் பெயர்கள் நமக்குத் தெரிந்த போதிலும் இன்ன பண் இன்ன சுரங்களையுடையது என்று தெரிவது மிகவும் அரிதாக இருக்கிறது. இந்தப் பண்கள் பற்றி மேலும் ஆய்வு செய்யப்பட வேண்டியது அவசியமாகும்.

---

1. அறிவனார், மதுரையில் கடைச்சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த முடத்திருமாறன் என்னும் பாண்டிய மன்னன் காலத்தைச் சேர்ந்தவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்ககால இசை நாடக இலக்கணம் கூறும் நூற்களுள் பஞ்சமரபும் ஒன்றாகும். இசை மரபு, வாச்சிய மரபு (முழவு), நிருத்த மரபு, அவிநய மரபு, தாள மரபு என்னும் ஐந்து மரபுகளைப் பற்றி இந்நூல் கூறுகிறது.

   பஞ்சமரபில் பல வடமொழிச் சொற்கள் காணப்படுகின்றன, சங்ககால நூற்களில் வடமொழிச் சொற்கள் தவிர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இது காலத்தால் மிகவும் பிற்பட்டது என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

2. ஆதாரம் புலவர் மு. சண்முகம்பிள்ளை அவர்கள் இயற்றிய நிகண்டுச் சொற்பொருட் கோவை. —மதுரை காமராசர் பல்கலைக்கழக வெளியீடு.

3. நூற்றுமூன்று பண்கள் பற்றிய விவரங்களைப் பின்வரும் நூற்பகுதிகளிலும் கட்டுரை களிலும் காணலாம் :

   தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய ''கருணாமிர்த சாகரம்'' முதலாம் புத்தகம் பக்கம் 615 முதல் 618 வரை.

   விபுலாநந்த ஸ்வாமிகள் இயற்றிய ''யாழ் நூல்'' —பக்கம் 615 முதல் 618 வரை

   பேராசிரியர் திரு. க. வெள்ளைவாரணனார் இயற்றிய ''இசைத்தமிழ்''
   —பக்கம் 42 முதல் 45 வரை

   திரு ம. ப. பெரியசாமித்தூரன் அவர்கள் 1949-ஆம் ஆண்டு தமிழ் இசைச்சங்கம், பண் ஆராய்ச்சிக்கூட்டத்தில் ''பண் வரலாறு'' என்ற தலைப்பில் வாசித்த கட்டுரை.

# 6

# பக்திப் பாடல்கள்

பார்க்குமிடமெல்லாம் நீக்கமற நிறைந்து உலகுயிர்களை இயக்கியருளும் இறைவனை வழிபடுவதற்குரிய பல்வேறு சாதனங்களில் பண்ணார்ந்த பக்திப் பாடல்கள் முக்கியமானவையாகும். இறைவனைப் புகழ்ந்தேத்தும் பக்திப் பாடல்கள் அவற்றை இசைக்கின்றவர்களின் உள்ளத்தை நெகிழ்வித்து, இறைவனின் திருக்கோயிலாக அவ்வுள்ளத்தை மாற்றும் ஆற்றல் மிக்கவை ஆகும்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டு முதல் தமிழ்நாட்டில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திநாயனுர் ஆகிய மூவரும் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்களும், மாணிக்கவாசகப்பெருமான் அருளிச்செய்த திருவாசகமும், பன்னிரு ஆழ்வார்கள் அருளிய திவ்வியப்பிரபந்தமென்னும் தெய்வத் திருப்பாடல்களும் நாளும் இன்னிசையால் இறைவனைப் போற்றும் சாதனங்களாக விளங்கின. பல்வேறு பண்களில் அமைக்கப்பெற்ற இந்த அருட்பாக்கள் தமிழ்நாடு முழுவதும் பரவின. இறையடியார்கள் இறைவனது புகழைப் பண்ணார்ந்த இப்பாடல்களால் பாடி வழிபாடு செய்து மகிழ்ந்தனர்.

**தேவாரம்** :

சைவ சமயக்குரவர் நால்வருள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திநாயனார் ஆகிய மூவரும் பாடியருளிய தேவாரத் திருப்பதிகங்கள் இயலிலும் இசையிலும் பக்தியிலும் சிறந்து விளங்குகின்றன. பல்வேறு தாளங்களில் இசைநயத்தோடும் கற்பனை வளத்தோடும் பாடக்கூடிய பாடல்கள் இவை.

தேவாரம் என்னும் சொற்றொடருக்கு பலரும் பல பொருள் கொள்கின்றனர். இதனை தேவ+ஆரம் எனப்பிரித்து இறைவனுக்கு மாலையானது என்று சிலர் பொருள் கொள்கின்றனர். தே+வாரம் எனப் பிரித்து இறைவன் பால் மெய்யடியார்கள் வைத்த அன்பு எனப்பொருள்பட வழங்கப்படுகிறது.

தே என்னும் சொல் தெய்வம் என்னும் பொருளைக் குறிக்கிறது. வாரம் என்பது இசையியக்கம் நான்கினுள் ஒன்று. முதல் நடை, வாரம், கூடை, திறள் என்னும் இசையியக்கம் நான்கினுள், வாரம் மிகவும் மந்த நடையும் அல்லாது, மிகவும் விரைந்த நடையும் அல்லாது இடையிலுள்ள, சொல்லழகும், இசையழகும் பொருந்திய பாடல் எனப்படுவது.

''வாரம் பாடுதல்'' என்பது இசைப் பாடலால் கடவுளைப் போற்றி வழிபடுதல் என்ற பொருளில் கடைச்சங்க காலத்தில் வழங்கி வந்ததாகத் தெரிகிறது[1]. சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதையில்,

''தொன்னெறி யியற்கைத் தோரிய மகளிரும்
சீரியல் பொலிய நீரல நீங்க
வாரம் இரண்டும் வரிசையிற் பாட''

(அடி 134 முதல் 136 வரை)

என வரும் பாடலடிகளுக்கு ''ஆடி முதிர்ந்தாராகிய மகளிர் நன்மை உண்டாகவும், தீமை நீங்கவும் வேண்டித் தெய்வப் பாடல் பாட'' என அடியார்க்கு நல்லார் பொருள் கூறியுள்ளார்.

**திருவாசகம் :**

மாணிக்கவாசகப் பெருமான் அருளிச்செய்த திருவாசகப் பாடல்கள் பக்தியிலும், சொல் நயத்திலும், பொருள் நயத்திலும் ஈடு இணையற்று விளங்குகின்றன. ''திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்'' என்பது பழமொழி.

மாணிக்கவாசகர் அருளின 'திருவெம்பாவை' மார்கழித் திங்கள் முழுவதும் கோயில்களில் ஓதுவாரடிகளால் பாடப்பெறுகிறது.

**நால்வர் வாழ்ந்த காலம் :**

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் ஏழாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள். சுந்தரமூர்த்தி நாயனார் எட்டாவது நூற்றாண்டின் இறுதியிலும் ஒன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர்.

மாணிக்கவாசகர் ஒன்பதாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர் எனப் பெரும் பான்மையான ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். ஒருசில ஆய்வாளர்கள் அவர் ஏழாவது நூற்றாண்டிற்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்தவர் எனக் குறிப்பிட்டுள்ளனர்.

மாணிக்கவாசகரின் காலம் ஏழாவது நூற்றாண்டிற்கு முற்பட்டதாக இருக்கவேண்டும் என இசைப் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி ஊகிக்கிறார்[2] மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகப் பாடல்களுக்குப் பண் குறிப்பிடப்பட வில்லை என்றும், திருவாசகப் பாடல்கள் மோகன இராகத்தில் பாடப்பட்டன என்றும், இதன் காரணமாக தேவாரப் பதிகங்களில் மோகன இராகம் பயன் படுத்தப்படவில்லை என்றும், யாழைப்பற்றி மாணிக்கவாசகப் பெருமான் குறிப்பிட்டிருக்கிறார் என்றும், ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் யாழ் என்னும் இசைக் கருவி பழக்கத்தில் இல்லாமல்போய்விட்டது என்றும் அவர் காரணம் காட்டியிருக்கிறார்.

மாணிக்கவாசகர் கி. பி. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகச் சொல்லப்படுவதாக கருணாமிர்த சாகரம் முதல் நூலில் குறிப்பிடப்பட்டு உள்ளது. (பக்கங்கள் 622, 630).

**பதிகங்களும் பண்களும் :**

பழந்தமிழ் நூற்களிலே குறிப்பிடப்பட்டுள்ள நூற்றுமூன்று பண்களில்லை இருபத்து மூன்று பண்கள் தேவாரப் பதிகங்களைப் பாடுவதற்குப் பயன் படுத்தப்பட்டன எனத் தெரிகிறது. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகப் பாடல்களுக்குப் பண் குறிப்பிடப்படவில்லை. சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பயன்படுத்திய பண்களைக கவனிப்போம்.

**திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பண்கள்[3] :**

1. நட்டபாடை
2. தக்கராகம்
3. பழந்தக்கராகம்
4. தக்கேசி
5. குறிஞ்சி
6. வியாழக்குறிஞ்சி
7. மேகராகக்குறிஞ்சி
8. இந்தளம்
9. சீகாமரம்
10. பியந்தைக்காந்தாரம்
11. காந்தாரம்
12. நட்டராகம்
13. செவ்வழி
14. காந்தார பஞ்சமம்
15. கொல்லி
16. கௌசிகம்

17. பஞ்சமம்
18. சாதாரி
19. புறநீர்மை

**திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பண்கள் :**

1. கொல்லி
2. காந்தாரம்
3. பியந்தைக்காந்தாரம்
4. சாதாரி
5. காந்தார பஞ்சமம்
6. பழந்தக்கராகம்
7. பழம் பஞ்சுரம்
8. இந்தளம்
9. சீகாமரம்
10. குறிஞ்சி

**சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய திருப்பதிகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள பண்கள் :**

1. இந்தளம்
2. தக்கராகம்
3. நட்டராகம்
4. கொல்லி
5. பழம் பஞ்சுரம்
6. தக்கேசி
7. காந்தாரம்
8. காந்தார பஞ்சமம்
9. நட்ட பாடை
10. புறநீர்மை
11. சீகாமரம்
12. குறிஞ்சி
13. செந்துருத்தி
14. கௌசிகம்
15. பஞ்சமம்
16. பியந்தைக் காந்தாரம்
17. கொல்லிக்கௌவாணம்

தேவாரத் திருப்பதிகங்கள் சுத்தாங்கமாகவும், பண்ணாங்கமாகவும் பாடப்பட்டன என்று அறிகிறோம். தாளமில்லாமல் வெறும் பண்ணிலே பதிகங்களைப் பாடுவது சுத்தாங்கமென்றும், தாளத்தோடு பண்ணிலே பதிகங்களைப் பாடுவது பண்ணாங்கமென்றும் வழங்கப்பெற்றது.

**பகற்பண்கள், இராப்பண்கள், பொதுப்பண்கள் :**

தேவாரப் பண்களைப் பகற்பண், இராப்பண், பொதுப்பண் என மூவகையாகப் பகுத்து, அவை முறையே இன்னஇன்ன நேரங்களில் பாடப்பட வேண்டும் என்றும், இன்னஇன்ன பதிகங்கள் இன்னஇன்ன பண்களில் பாடப்படவேண்டும் என்றும் தெரிவிக்கும் தேவாரப் பண்முறைக் குறிப்பு ஒன்று திருவாவடுதுறை ஆதீனத்திலுள்ள ஏட்டுப் பிரதி ஒன்றில் இருப்பதாக ஆசிரியப்பெருந்தகை பொன்னோதுவாரவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்[4].

## பகற்பண்கள், இராப்பண்கள், பொதுப்பண்கள்

| | பகற்பண்கள் | நாழிகை | திருவாவடுதுறை முறை—இராகங்கள் | இக்கால ஓதுவார்களின் முறை—இராகங்கள் |
|---|---|---|---|---|
| 1. | புறநீர்மை | 0—3 | ஸ்ரீகண்டி | பூபாளம் |
| 2. | காந்தாரம் | 3—6 | இச்சிச்சி | நவரோசு |
| 3. | கௌசிகம் | 6—9 | பயிரவி | பயிரவி |
| 4. | இந்தளம், திருக்குறுந்தொகை | 9—12 | நௌிதபஞ்சமி | நாதநாமக்ரியா |
| 5. | தக்கேசி | 12—15 | காம்போதி | காம்போதி |
| 6. | நட்டராகம், சர்தாரி | 15—18 | பந்துவராளி | பந்துவராளி |
| 7. | நட்டபாடை | 18—21 | நாட்டைக்குறிச்சி | நாட்டை |
| 8. | பழம்பஞ்சுரம் | 21—24 | சங்கராபரணம் | சங்கராபரணம் |
| 9. | காந்தாரம், பஞ்சமம் | 24—27 | கேதாரகௌளை | கேதாரகௌளை |
| 10. | பஞ்சமம் | 27—30 | ஆகிரி | ஆகிரி |

| | இராப்பண்கள் | நாழிகை | திருவாவடுதுறை முறை—இராகங்கள் | இக்கால ஓதுவார்களின் முறை—இராகங்கள் |
|---|---|---|---|---|
| 1. | தக்கராகம் | 30—33¾ | கன்னடகாம்பேதி | காம்போதி |
| 2. | பழந்தக்கராகம் | 33¾—37½ | சுத்தசாவேரி | சுத்தசாவேரி |
| 3. | சீகாமரம் | 37½—41¼ | நாதநாமக்ரியை | நாதநாமக்ரியை |
| 4. | கொல்லி, கொல்லிக் கௌவாணம், திருநேரிசை திருவிருத்தம் | 41¼—45 | சிந்துகன்னடா | நவரோசு |
| 5. | வியாழக்குறிஞ்சி | 45—48¾ | சௌராஷ்டிரம் | சௌராஷ்டிரம் |
| 6. | மேகராகக்குறிஞ்சி | 48¾—52½ | நீலாம்பரி | நீலாம்பரி |
| 7. | குறிஞ்சி | 52½—56¼ | மலகரி | அரிகாம்போதி, எதுகுலகாம்போதியின் கலப்பு |
| 8. | அந்தாளிக்குறிஞ்சி | 56¼—60 | சைலதேசாட்சி | சாமா |

**பொதுப்பண்கள் (பகல், இரவு ஆகிய எக்காலமும் பாடுதற்குரியன):**

1. செவ்வழி — எதுகுலகாம்போதி — எதுகுலகாம்போதி
2. செந்துருத்தி — மத்தியமாவதி — மத்தியமாவதி
3. திருத்தாண்டகம் — பியாகடை — அரிகாம்போதி

**பண்களும் அவைகளுக்கு இணையாகக் கருதப்படும் இராகங்களும்:**

பண்டைத் தமிழ்நாட்டின் இசைமுறையை அறிந்துகொள்வதற்கு தேவாரத் திருப்பதிகங்கள் அரியதொரு கருவூலம் ஆகும் என்பதில் ஐயமில்லை. தேவாரத் திருப்பதிகங்களில் குறிப்பிடப்பட்டுள்ள இருபத்து மூன்று பண்கள் எவை, அவைகளுக்கு ஈடாகக் கருதப்படும் இக்கால இராகங்கள் எவை என்று கண்டறிவதற்குத் தமிழிசைச்சங்கம் 1949-ஆம் ஆண்டு முதல் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து பண் ஆராய்ச்சியை நடத்தி வருகிறது. தமிழிசைச் சங்கம், இவ்வாராய்ச்சி அரங்கிற்கு, வயதிலும், அனுபவத்திலும் முதிர்ந்த பல ஓதுவாமூர்த்திகளை வரவழைத்து அவர்களைக்கொண்டு தேவாரப் பாடல்களை மரபுமுறை வழுவாமல் பாடச்செய்துள்ளது. இசை வல்லுநர்கள், ஆய்வாளர்கள், தமிழ்ப்புலவர்கள் ஆகியோர் ஓதுவாமூர்த்திகள் பாடிய பண்கள் பற்றி இவ்வரங்கில் விரிவான ஆய்வுகள் நடத்தியுள்ளனர். இசை வல்லுநர்களும் தமிழ்ப்புலவர்களும் கண்ட முடிவுகளை தமிழிசைச் சங்கம் அவ்வப்போது வெளியிட்டு இசைத்தமிழுக்குச் சிறந்த பணி புரிந்துள்ளது.

**நூற்றுமூன்று பண்களுக்குள்ளே தேவாரத்துட் காணப்படும் இருபத்துமூன்று பண்களும் அவைகளுக்கு இணையாகக் கருதப்படும் தற்கால இராகங்களும்**

| | பண் | இராகம் | 103 பண்களில் கொடுக்கப்பட்டுள்ள வரிசை இலக்கம் |
|---|---|---|---|
| 1. | இந்தளம் | மாயாமாளவகௌளை | 73 |
| 2. | சீகாமரம் | நாதநாமக்ரியா | 82 |
| 3. | அந்தாளிக்குறிஞ்சி | சாமா | 38 |
| 4. | பழம் பஞ்சுரம் | சங்கராபரணம் | 46 |
| 5. | கொல்லி | நவரோசு | 70 |
| 6. | மேகராகக்குறிஞ்சி | நீலாம்பரி | 47 |
| 7. | புறநீர்மை (நேர்திறம்) | பூபாளம் | 21 |

| பண் | இராகம் | 103 பண்களில் கொடுக்கப்பட்டுள்ள வரிசை இலக்கம் |
|---|---|---|
| 8. கௌசிகம் | பைரவி | 80 |
| 9. சாதாரி | பந்துவராளி | 98 |
| 10. செவ்வழி | யதுகுலகாம்போதி | 13 |
| 11. பஞ்சமம் | ஆகிரி | 25 |
| 12. தக்கேசி | காம்போதி | 69 |
| 13. செந்துருத்தி (செந்திறம்) | மத்யமாவதி | 65 |
| 14. வியாழக்குறிஞ்சி | சௌராஷ்டிரம் | 64 |
| 15. காந்தாரபஞ்சமம் | கேதாரகௌளை | 76 |
| 16. நைவளம் (நட்டபாடை) | நாட்டை | 37 |
| 17. பழந்தக்கராகம் | சுத்தசாவேரி | 54 |
| 18. குறிஞ்சி | அரிகாம்போதி | 61 |
| 19. நட்டராகம் | பந்துவராளி | 62 |
| 20. தக்கராகம் | காம்போதி | 17 |
| 21. காந்தாரம் | நவரோசு | 33 |
| 22. பியந்தை | நவரோசு | 81 |
| 23. கொல்லிக்கௌவாணம் | நவரோசு | 49 |

ஓதுவா மூர்த்திகள் இக்காலத்தில் காந்தாரம், பியந்தை, கொல்லி, கொல்லிக்கௌவாணம் ஆகிய நான்கு பண்களையும் நவரோசு இராகத்தில் பாடி வருகின்றார்கள். தக்கேசி, தக்கராகம் ஆகிய இரண்டு பண்களையும் காம்போதி இராகத்தில் பாடி வருகிறார்கள். நட்டராகம், சாதாரி ஆகிய இரண்டு பண்களையும் பந்துவராளி இராகத்தில் பாடி வருகிறார்கள். இந்த எட்டு பண்களும் வெவ்வேறாகப் பிங்கல நிகண்டில் குறிக்கப்பெற்றுள்ளன. யாழ் நூலாசிரியர் விபுலானந்த அடிகளார் நூற்று மூன்று பண்களை வரிசைப்படுத்தி காந்தாரம்-33, கொல்லிக்கௌவாணம்-49, கொல்லி-70, பியந்தை-81 என்று எண்கள் தந்துள்ளார்கள். ஆகவே இந்தப் பண்கள் வெவ்வேறான இராகங்களாக இருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம்.

புறநீர்மை என்னும் பண் அந்தரகாந்தாரத்துடன் கூடிய பூபாள இராகத்தில் பாடப்படுகிறது. இந்தப்பண் பௌளி இராகத்திலும் பாடப்படுகிறது. பழந்தக்கராகம் என்னும் பண் சுத்தசாவேரி இராகத்தில் பாடப்படுகிறது. பெரும்பான்மையோர் இதை ஆரபி இராகத்தில் பாடுகிறார்கள். குறிஞ்சிப்பண் அரிகாம்போதி இராகத்தில் பாடப்படுகிறது. இது குறிஞ்சி இராகத்திலேயே இருக்கலாம் என்பது பெரும்பான்மையோர் கருத்து.

கொல்லிக்கௌவாணம் என்னும் பண்ணிலமைந்த பதிகங்களைப் பிற்காலத்தைச் சேர்ந்த சிலர் சிந்து கன்னடா இராகத்திலும், பலர் நவரோசு இராகத்திலும் பாடுகின்றனர். பண் வரிசையில் 81-வது பண்ணான பியந்தை என்னும் பண்ணும் தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பியந்தைக் காந்தாரமும் ஒன்றே என்று கொள்ளலாம். தக்கராகப் பதிகங்கள் பிற்காலத்தில் கன்னட காம்போதியிலும், காம்போதியிலும் பாடப்பெற்றன. கன்னட காம்போதி என்னும் பெயரில் இந்நாளில் எவ்வித இராகமும் இல்லை.

**சங்கீத ரத்னாகரத்தில் கூறப்பட்டுள்ள சில பண்கள் :**

சாரங்கதேவர் வடமொழியில் இயற்றிய ''சங்கீத ரத்னாகரம்'' என்னும் நூல் சிறந்த இசை நாடக நூலாகும். இவர் பதின்மூன்றாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் வடநாட்டில் தவுலதாபாத் தேவகிரி இராச்சியத்தில் சிம்மண ராஜசபையில் சமத்தான வித்துவானாகப் பணியாற்றியவர். (1210—1247)[5] இவர் தமிழ்நாட்டிற்கு வந்து இங்கு வழக்கில் இருந்த சில பண்களை நன்குணர்ந்து, அப்பண்கள் சிலவற்றின் இலக்கணங்களைத் தாம் இயற்றிய ''சங்கீத ரத்னாகரம்'' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்[6]. தேவாரத் திருப்பதிகங்களில் காணப்படும் தமிழ்ப்பண்கள் சிலவற்றைத் ''தேவார வர்த்தினி'' என்னும் அடைமொழியுடன் குறிப்பிட்டுள்ளார்.

**பண்கள் :**

1. டக்க விபாஷா தேவார வர்த்தினி
2. மாளவகௌசிக தேவார வர்த்தினி
3. பின்ன சட்ஜ விபாஷா தேவார வர்த்தினி
4. கர்நாட பங்காளம்
5. திராவிடி
6. தட்சணகுச்சரி
7. இந்தளம்
8. சுத்த சாதாரி
9. சுத்தகௌசிகம்
10. டக்க
11. சுத்த பஞ்சமம்
12. நட்டராகம்
13. ரூபசாதாரி
14. டக்க கௌசிகம்
15. திராவிட பாஷா

பழங்காலத்தில் இசைத்தமிழ் சிறந்த இலக்கண முறைப்படி வகுக்கப்பட்டிருந்தது என்றும், அக்காலத்தில் வழக்கிலிருந்த பல பண்களும் அவற்றின் பெயர்களும் வடமொழி இசை நூற்களில் எடுத்தாளப்பெற்றிருக்கின்றன என்றும் அறிகிறோம். சில பண்களின் பெயர்கள் மாற்றப்பட்டும், சில பண்களின் பெயர்கள் மாற்றப்படாமலும், இந்நூற்களில் சேர்க்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம்.

**திருமுறை கண்ட சோழன் :**

பதினோராவது நூற்றாண்டில் இராஜராஜ அபயகுல சேகரன் என்னும் சோழன் நம்பியாண்டார் நம்பிகளின் துணைக்கொண்டு, தில்லைத் திருக்கோயிலில் பூட்டிவைக்கப்பட்டிருந்த தேவாரச் சுவடிகளைக் கண்டெடுத்து அவைகளை சைவ உலகிற்கு அளித்தான் என்று திருமறை கண்ட புராணத்தில் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு கண்டெடுக்கப்பட்ட பதிகங்கள் மொத்தம் எழுநூற்று தொண்ணூற்று ஆறு ஆகும்.[7] இப்பதிகங்களிலுள்ள திருப்பாடல்களின் தொகை எண்ணாயிரத்து இருநூற்று ஐம்பது ஆகும்.

அபயகுலசேகரன் என்னும் சிறப்புப் பெயருடைய மன்னன் முதலாம் ஆதித்த சோழனே என்றும், நம்பியாண்டார் நம்பிகள் முதலாம் ஆதித்தன் காலத்திலும் அவனுடைய புதல்வன் பராந்தகன் காலத்திலும் வாழ்ந்தவர் என்றும் பேராசிரியர் வெள்ளைவாரணனார் எழுதிய பன்னிரு திருமுறை வரலாற்றிலும், பேராசிரியர் டி. வி. சதாசிவ பண்டாரத்தார் இயற்றிய 'பிற்காலச்சோழர் வரலாறு' என்ற நூலிலும் போதிய சான்றுகளுடன் தெரிவிக்கப்பட்டுள்ளன.

அதேசமயத்தில் அபயகுலசேகரன் என்பவன் முதலாம் இராஜராஜ சோழனே என்றும், அவனே நம்பியாண்டார் நம்பிகள் துணைக்கொண்டு திருமுறைகளைத் தொகுத்தான் என்றும் ''சோழர்கள்'' என்னும் ஆங்கில நூலை எழுதிய கே. எஸ். நீலகண்டசாஸ்திரி அவர்களும், ''இராஜராஜ சோழன்'' என்னும் நூலை இயற்றிய எல். உலகநாதபிள்ளை அவர்களும் கருதுகின்றனர்.

**திருப்பதிகங்களுக்குப் பண் அமைத்தல் :**

தில்லையில் கண்டெடுக்கப்பட்ட திருப்பதிகங்கள் அத்தனையும் முறையாகப் பாடப்படவேண்டும் என மன்னன் விரும்பினன். திருமுறை வகுத்த நம்பியாண்டார் நம்பிகள் திருவெருக்கத்தம் புலியூரில் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபிற் பிறந்த இசையில் தேர்ந்த பாடினியார் ஒருவரைக் கொண்டு தேவாரத் திருப்பதிகங்களுக்கு இசையமைத்தார் எனத்தெரிகிறது.

**இராஜராஜசோழ மன்னனின் சிறந்த தொண்டு :**

இராஜராஜசோழ மன்னன் தஞ்சையில் அரசாண்ட காலம் கி. பி. 985 முதல் 1013 வரை என்று கணிக்கப்பட்டுள்ளது. சிறுபிராயத்தில் இவனுக்கு அருண்மொழித்தேவன் என்றும், அதன்பின் மும்முடிச்சோழன் என்றும் பெயர் வழங்கி வந்தது. இவன் அரசாட்சி செய்த காலத்தில் தஞ்சைப் பெரியகோயில்

கட்டப்பட்டதாகத் தெரிகிறது. கோயிலின் சுற்றுச்சுவர்களில் இவனால் வெட்டுவிக்கப்பட்ட அநேக சாசனங்கள் காணப்படுகின்றன. ஒரு சாசனத்தில் தேவாரம் பாடிவந்த ஓதுவார்களுக்கு (பிடாரர்களுக்கு) அளிக்கப்பட்ட மானியம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது[8].

தேவாரத் திருப்பதிகங்களைப் பாடுவதற்கு ஓதுவார்கள் (பிடாரர்கள்) நாற்பத்தெண்மரையும், உடுக்கை வாசிப்பவன் ஒருவனையும், கொட்டி மத்தளம் வாசிப்பவன் ஒருவனையும் நியமித்து, இந்த ஐம்பதின்மர்க்கும் இராஜராஜசோழன் நிவந்தங்கள் வழங்கி வந்தான் எனத்தெரிகிறது. இந்த ஓதுவார்கள் தஞ்சைப் பெரியகோயிலில் தேவாரத் திருப்பதிகங்கள் பாடுவதற்கு உரிய தகுதியும், சிறந்த ஒழுக்கமும் பெற்றிருந்தனர் எனத்தெரியவருகிறது.

இயல், இசை, கூத்து எனப்படும் முத்தமிழையும் வளர்க்க நானூறு தளிச்சேரிப்பெண்டுகளையும் இராஜராஜன் நியமித்திருந்தான் என்று மற்றொரு சாசனத்தின் மூலம் தெரியவருகிறது. தளிச்சேரி என்னும் சொல் கோயிலைச் சேர்ந்த குடியிருப்புப் பகுதியைக் குறிக்கின்றது. மேலும் இந்தக் கலைநிகழ்ச்சிகளில் பங்குகொள்ளும் நட்டுவனார்கள், வங்கியம் வாசிப்போர் உடுக்கை வாசிப்போர், வீணை வாசிப்போர், ஆரியம் பாடுவோர் (வடமொழிப் பாடல்களைப் பாடுவோர்), தமிழ்ப் பாடுவோர், முத்திரைச் சங்கு ஊதுவோர், கட்டியம் கூறுவோர் முதலான நூற்று ஒன்பது பேருக்கு மானியம் வழங்கி ஆதரித்தான் எனத்தெரிகிறது.

இராஜராஜன் தேவாரத் திருப்பதிகங்களை அருளிச்செய்த சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூன்று நாயன்மாருக்கும் திருவுருவம் அமைத்து, தஞ்சைப் பெரியகோயிலில் நிறுவியுள்ளான். மேலும் தஞ்சைப் பெரியகோயில் கருவறையில் சுந்தரரின் வாழ்க்கையை அற்புத ஓவியமாக மன்னன் தீட்டி வைத்துள்ளான்.

**நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் :**

பன்னிரு ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களே திவ்வியப்பிரபந்தம் என்று வழங்கப்படுகிறது. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகிய பன்னிரு ஆழ்வார்களும் அருளிச்செய்த பாசுரங்களின் தொகை ஏறக்குறைய நாலாயிரம் ஆனமையால் இவைகளின் தொகுப்பு நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் என்று பெயர் பெற்றது.

**பக்திநயம் மிகுந்த பாசுரங்கள் :**

திவ்வியப்பிரபந்தப் பாசுரங்கள் சொல் நயம், பொருள் நயம், பக்தி நயம் முதலிய நயங்கள் கொண்டவை. இப்பாசுரங்களில் குறிப்பாக பக்தி நயம் மிகுந்து காணப்படுகிறது. இறைவனைக் குழந்தையாகவும், நாயகனாகவும் பாவித்துப் பல பாடல்கள் பாடப்பட்டுள்ளன. இறைவனின் அருளைப் பெறுவதற்குச் சிறந்த வழி பக்தி மார்க்கமே என்னும் மையக்கருத்து இப்பாசுரங்களில் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**பண் அமைப்பு :**

நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் பொழ்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் முதல் மூன்று ஆழ்வார்கள் அருளிச் செய்த திருப்பாடல்கள் இயற்பா வகையைச் சேர்ந்தவை. 'இயற்பா' வகையில் மேலும் சில நூற்கள் உள. இவை தவிர:

*பெரியாழ்வார் அருளிய திருமொழி (473 பாசுரங்கள்)*
*ஆண்டாள் அருளிய திருப்பாவை (30 பாசுரங்கள்)*
*நாச்சியார் திருமொழி (143 பாசுரங்கள்)*
*குலசேகராழ்வார் அருளிச்செய்த பெருமாள் திருமொழி (105 பாசுரங்கள்)*
*திருமழிசையாழ்வார் அருளிச்செய்த திருச்சந்த விருத்தம் (120 ,, )*
*தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருமாலை (45 ,, )*
*திருப்பள்ளியெழுச்சி (10 பாசுரங்கள்)*
*திருப்பாணாழ்வார் அருளிய அமலனாதி பிரான் (10 பாசுரங்கள்)*
*திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரியதிருமொழி (1084 பாசுரங்கள்)*
*திருக்குறுந்தாண்டகம் (20 பாசுரங்கள்)*
*திருநெடுந்தாண்டகம் (30 பாசுரங்கள்)*
*நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழிப் பதிகங்கள் (1102 பாசுரங்கள்)*

ஆகியவை பண்ணோடு பாடுவதற்குரிய இசைத்தமிழ் இலக்கியங்களாக இருக்கின்றன.

நாதமுனிகள் என்பவர் மேலையகத்தாழ்வான், கீழயகத்தாழ்வான் என்ற தம் மருமகர் இருவருக்குப் பண் பயிற்றுவித்து அவர்களைக்கொண்டு நாலாயிரத்திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்கு இசை அமைத்தார் எனத் தெரிகிறது.[9]

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழிக்கு பண்கள் குறிக்கப்பட்டு உள்ளன. திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழிக்கும் மதுரைச் சங்கத்தேட்டில் பண்ணும் தாளமும் குறிப்பிடப்பட்டுள்ளதாகத் தெரிகிறது[10].

**திவ்வியப்பிரபந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பண்கள் :**

திவ்வியப்பிரபந்தத்தில் திருவாய்மொழியிலும், பெரிய திருமொழியிலும் குறிப்பிடப்பட்டுள்ள பண்கள் இருபத்து எட்டு ஆகும், அவையாவன[11]

1. இந்தளம்
2. முதிர்ந்த குறிஞ்சி
3. பழந்தக்க ராகம்
4. தக்கராகம்
5. நைவளம் (நட்டபாடை)
6. சீகாமரம்
7. மேகராகக்குறிஞ்சி
8. புறநீர்மை
9. அந்தாளி
10. நட்டராகம்
11. தோடி
12. பஞ்சமம்
13. பஞ்சுரம்
14. பழம் பஞ்சுரம்
15. பாலையாழ்
16. கொல்லி
17. செந்துருத்தி
18. கௌவாணம்
19. பியந்தை
20. வியாழக்குறிஞ்சி
21. குறண்டி
22. தக்கேசி
23. குறிஞ்சி
24. செருந்தி
25. வியந்தம்
26. நாட்டம்
27. கைசிகம்
28. காந்தாரம்

திருவாய்மொழியில் இல்லாது பெரிய திருமொழியில் அந்தாளி, குறண்டி, கௌவாணம், நைவளம், பஞ்சுரம், பியந்தை, வியாழக்குறிஞ்சி என்னும் ஏழு பண்கள் உள்ளன. பெரிய திருமொழியில் இல்லாது திருவாய் மொழியில் கௌசிகம், செருந்தி, முதிர்ந்த இந்தளம் என்னும் மூன்று பண்கள் உள்ளன.

தேவாரத்தில் இல்லாது திருவாய்மொழியிலும், பெரிய திருமொழியிலும் உள்ள பண்கள் பத்தாகும். அவை யாவன[12].

1. முதிர்ந்த குறிஞ்சி
2. வியந்தம்
3. பாலையாழ்
4. செருந்தி
5. நாட்டம்
6. அந்தாளி
7. தோடி
8. கௌவாணம்
9. குறண்டி
10. முதிர்ந்த இந்தளம்

**அரையர் சேவை[13] :**

தமிழ்நாட்டிலுள்ள வைணவக் கோயில்கள் சிலவற்றில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களான நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம், இசையுடனும் அபிநயத்துடனும் பாடி ஆடிவரும் பழக்கம் இன்றும் உள்ளது. இயல், இசை, நாட்டியம் எல்லாம் ஒருங்கே சேர்ந்து அமைந்த இந்தச் சிறந்த கலை அரையர் சேவை என்று அழைக்கப்படுகிறது.

திருமாலின் அவதாரத்தை விவரிக்கும் பாசுரங்களும், நாயக நாயகி பாவத்தில் அமைந்த பாசுரங்களும் அரையர் சேவையில் இசை மூலமும், அபிநயம் மூலமும் நன்கு விளக்கப்படுகின்றன.

இக்கலை நிகழ்ச்சி ஆழ்வார் திருநகரி, திருவில்லிப்புத்தூர், திருவரங்கம் ஆகிய வைணவத்தலங்களில் மட்டுமே திருவிழா நாள்களிலும் விசேட நாள்களிலும் இன்றும் நடைபெற்று வருகிறது.

**திருப்புகழ் :**

பதினான்காம் நூற்றாண்டின் இறுதியிலும் பதினைந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்த அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்கள் சொல்வளத்திலும், பொருள் நயத்திலும் சிறந்து விளங்குகின்றன. சந்த ஓசை நயங்களுக்கும், தாள வித்தியாசங்களுக்கும், செறிவுள்ள கருத்துக்களுக்கும் திருப்புகழ் பெயர் பெற்றது. எவ்வாறு தேவாரப் பாடல்கள் இராகத்தை மையமாகக்கொண்டு விளங்குகின்றனவோ அதேபோல் திருப்புகழ்ப் பாடல்கள் சந்தத்தை மையமாகக்கொண்டு திகழ்கின்றன. திருப்புகழ்ப் பாடல்களில் சந்தத்தை அடித்தளமாக வைத்து சொற்கள் பொருட்சுவை ததும்ப அமைக்கப்பட்டுள்ளன.

தாளங்களுக்கு ஏற்ற சந்தங்கள் :

இசை நூற்களில் சொல்லப்பட்டுள்ள முப்பத்தைந்து தாளங்கள், பழந்தமிழ் நூற்களில் கூறப்பட்டுள்ள நூற்றெட்டு தாளங்கள் ஆகியவற்றிற்கு ஏற்ற விதத்தில் திருப்புகழ்ப் பாடல்களில் சந்தங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

திருப்புகழ் லயத்தையே முதன்மையாகக் கொண்டதாதலின் இதற்கு கீர்த்தனம், பதம். முதலியவற்றைப்போல் சங்கதி போட்டுப் பாடுவது பொருத்தமானது அல்ல. திருப்புகழ்ப் பாடல்களில் சந்தங்கள் எவ்வாறு அமைந்திருக்கின்றனவோ அவற்றிற்குப் பொருத்தமான தாளங்களைத் தேர்ந்தெடுத்து இராகம் அமைப்பதுதான் சிறந்த முறையாகும்.

**திருப்புகழைப் பரப்பிய பெரியோர்கள் :**

திருப்புகழ்ப் பாடல்களைத் தொகுத்து 1895-ஆம் ஆண்டு புத்தக வடிவில் வெளியிட்ட வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளை, திருப்புகழ்ப் பாடல்களை சந்தக் குறிப்புக்களுடன் 1925-ஆம் ஆண்டு வெளியிட்ட மதுரை திரு. கந்தசாமி கவிராயர், திருப்புகழ்ப் பாடல்களைச் சேகரித்து உரையுடன் வெளியிட்ட தணிகைமணி வ. சு. செங்கல்வராயப்பிள்ளை ஆகியோருக்கு இசையுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

காஞ்சிபுரம் இசைப்பெரும்புலவர் நாயனாப்பிள்ளை, அவரது சீடர் சித்தூர் சுப்பிரமண்ணியபிள்ளை, திருப்பாம்புரம் சுவாமிநாதபிள்ளை, புதுக்கோட்டை மாமுண்டியாபிள்ளை, அவரது சீடர் தட்சிணாமூர்த்திபிள்ளை, வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகள், டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆசாரி, பழனி முத்தையாபிள்ளை ஆகியோர் திருப்புகழைப் பாடிப் பரப்பிய பெரியோராவர். இசைப்பேராசிரியர் சித்தூர் சுப்ரமணியபிள்ளை நூற்றொரு திருப்புகழ்ப் பாடல்களுக்கு இசையமைத்து சுரப்படுத்தியுள்ளார். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் இதனை ஒரு நூலாக வெளியிட்டுள்ளது. சித்தூர் சுப்பிரமணியபிள்ளையின் சீடரான டாக்டர். மதுரை எஸ். சோமசுந்தரம் திருப்புகழ் பாடுவதில் இன்று சிறந்து விளங்குகிறார்.

**அன்னமாச்சாரியார் :**

பதினைந்தாம் நூற்றாண்டில் தெலுங்கு மொழியில் ஆயிரக்கணக்கான பாடல்களை இயற்றி அவற்றை இசையுடன் பாடித் தொண்டாற்றியவர் தாள்ளபாக்கம் அன்னமாச்சாரியார் ஆவார்.

இவர் கடப்பை மாவட்டம் ராசம்பேட்டை தாலுக்காவைச் சேர்ந்த தாள்ளபாக்கம் என்னும் சிற்றூரில் 1408-ஆம் ஆண்டு பிறந்தார் என ஆய்வாளர்கள் தெரிவித்துள்ளனர்.

சிறுவயதிலேயே இவர் பாடுவதிலும், இசைப்பாடல்கள் இயற்றுவதிலும் திறமை பெற்றிருந்தார். இவர் பாடிய பாடல்கள் சங்கீர்த்தனங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவர் பாடிய பாடல்களின் மூலமெட்டுக்கள் நமக்குக் கிடைக்கவில்லை. இவர் இயற்றியுள்ள சங்கீர்த்தனங்களில் பாடி, ராமக்ரியா, தேசாளம், சாளங்க நாட்டை, தேசாட்சி, சாமந்தம், முகாரிபந்து முதலிய அபூர்வ இராகங்கள் காணப்படுகின்றன[14]. மூலமெட்டுக்கள் கிடைக்காமற் போனதால் திருமலை—திருப்பதி அறநிலையத்தார் அன்னமாச்சாரியின் சங்கீர்த்தனங்களுக்குப் புதிய மெட்டுக்கள் அமைத்து வெளியிட்டு வருகின்றனர்.

இவர் இயற்றியுள்ள பதினோராயிரம் சிருங்கார சங்கீர்த்தனங்களும், இரண்டாயிரத்து இருநூறு சங்கீர்த்தனங்களும் செப்பேடுகளில் இருந்து

பெயர்த்து எழுதப்பட்டுள்ளன. பஜனை பத்ததிக்கு இவரே ''மூல புருஷர்'' என சுப்பராம தீட்சிதர் தாம் எழுதிய ''சங்கீத சம்பிரதாய பிரதர்சினி'' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**புரந்தரதாசர்:**

''கர்நாடக சங்கீத பிதாமகர்'' என்றும், ''ஆதிகுரு'' என்றும் இசைக் கலைஞர்களால் போற்றப்பெறும் புரந்தரதாசர், தியாகராஜருக்கு மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பு கர்நாடக மாநிலத்தில் வாழ்ந்து நூற்றுக்கணக்கான தேவர் நாமாக்கள் என்று அழைக்கப்பெறும் பக்திப் பாடல்களை இயற்றியவர். இவரது காலம் கி. பி. 1484 முதல் 1564 வரை எனக் கூறப்பட்டுள்ளது. கன்னட மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட இவர் கன்னட மொழியிலேயே பக்திப் பாடல்களை இயற்றினார். இவரது பதங்கள் சொற்சுவை, பொருட்சுவைகளில் மேம்பட்டு விளங்குகின்றன. சியாம கல்யாணி, மாரவி, வசந்த பைரவி போன்ற பல அபூர்வ இரா்கங்களில் இவர் உருப்படிகள் இயற்றியுள்ளார்[15]. இவரது முத்திரை ''புரந்தர விட்டல'' என்பது.

இசையைக் கற்பவர்கள் அதை எளிதில் கற்கும் பொருட்டு மாயாமாளவகௌளை இராகத்திலேயே கற்கவேண்டும் என்னும் மரபை ஏற்படுத்தியவர் இவரே. மாயாமாளவகௌளை இராகத்திலேயே சுராவளி, ஜண்டை வரிசை, அலங்காரம் முதலியவற்றை இவர் இயற்றியுள்ளார். மலகரி இராகத்தில் கீதம் அமைத்துள்ளார். கீதத்தில் தாதுவும் (இராகம்) மாதுவும் (சொல்) மிக எளிதாக இணைந்துள்ளன.

**மூத்துத்தாண்டவர் :**

முத்துத்தாண்டவர் சிதம்பரம் நடராசப் பெருமான் மீது நூற்றுக் கணக்கான கீர்த்தனங்களையும் பதங்களையும் பாடியவர். இவர் பாடிய பதங்கள் பரத நாட்டியத்திற்கு மிகவும் ஏற்றவையாக இருந்தன. இவர் கி. பி. 1600-ஆம் ஆண்டை ஒட்டி வாழ்ந்தவர் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்[16].

**பல்லவி, அனுபல்லவி, சரணம் என்னும் அமைப்பு :**

தமிழில் முதன்முதலாக பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற அமைப்பைக் கொண்ட கீர்த்தனங்கள் இயற்றியவர் இவரே. இவரது பாடல்கள் சொற்சுவையும் பொருட்சுவையும் கொண்டு மக்கள் உள்ளத்தைத் தொடும் வகையில் அமைந்துள்ளன. இவர் நூற்றுக்கணக்கான கீர்த்தனைகளை இயற்றி

இருந்த போதிலும் இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளவை அறுபது கீர்த்தனங்களும் இருபத்தைந்து பதங்களுமேயாகும்.

இவர் முதலில் பாடிய பாடலின் பல்லவி,

''பூலோக கயிலாசகிரி சிதம்பரம் அல்லால்
புவனத்தில் வேறுமுண்டோ'' என்பதாகும்.

'' சேவிக்க வேண்டுமையா—சிதம்பரம்
சேவிக்க வேண்டுமையா''

என்று இப்பொழுது இசைவாணர்கள் ஆபோகி இராகத்தில் பாடும் கீர்த்தனம் முத்துத்தாண்டவர் இயற்றியதே. அவர் இயற்றிய

'' அருமருந்தொரு தனி மருந்து
அம்பலத்தே கண்டேனே''

என்னும் பாடல் இசை நிகழ்ச்சிகளில் மக்களால் விரும்பிக் கேட்கப்படும் பாடல்களுள் ஒன்றாகும்.

**பதங்கள் :**

இறைபக்தியில் மூழ்கித் திளைத்த முத்துத்தாண்டவர் அகத்துறையிலும் பல பாடல்களை இயற்ற எண்ணினார். இவர் இசை வேளாள மரபைச் சேர்ந்தவராதலால் இசையும், பரத நாட்டியமும் இவருக்கு நன்கு தெரியும். நாயக, நாயகி பாவத்தை மையமாகக் கொண்டு இவர் எழுதிய பாடல்கள் இசையிலும், சந்தத்திலும், பொருளிலும் சிறந்து விளங்கின. இவைகளைப் பதம் என்று நாம் அழைக்கிறோம். இவர் இயற்றிய பதங்கள் பரதநாட்டிய நிகழ்ச்சிகளில் வெகுவாகப் பயன்படுத்தப்படுகின்றன. தமிழில் முதன்முதலில் பதம் பாடியவரும் இவரே.

''தெருவில் வாரானோ—என்னைச் சற்றே
திரும்பிப் பாரானோ''

என்ற கமாஸ் இராகத்தில் இயற்றப்பட்ட பதமும்,

''தெண்டனிட்டேனென்று சொல்வீர்
நடேசர்க்கு நான்
தெண்டனிட்டேனென்று சொல்வீர்''

என்ற தோடி இராகப் பதமும், மிகவும் பிரசித்தி பெற்ற பதங்களாகும்.

**மாரிமுத்தாப் பிள்ளை :**

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இயல் இசைப் புலவர்களுள் மாரிமுத்தாப் பிள்ளையும் ஒருவராவார். சிதம்பரத்திற்கு அருகிலுள்ள தில்லைவிடங்கன் என்னும் சிற்றூரிலே இவர் பிறந்தார். இவரது காலம் கி. பி. 1712 முதல் 1787 வரை எனத்தெரிகிறது. முத்துத்தாண்டவரைப் போலவே இவரும் தில்லை நடராஜப்பெருமான்மீது பல கீர்த்தனங்களும், பதங்களும் பாடியுள்ளார். இளம்வயதிலேயே இவருக்கு நல்ல இசை அறிவு இருந்தது. இலக்கியத்திலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். இவர் நூற்றுக் கணக்கான கீர்த்தனங்கள் பாடியபோதும் நமக்கு இப்பொழுது இருபத்து ஐந்து கீர்த்தனங்களே கிடைத்துள்ளன. இந்தக் கீர்த்தனங்கள் பல்வேறு இராகங்களிலும் தாளங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. யதுகுல காம்போதி இராகத்தில் இவர் இயற்றிய

''காலைத் தூக்கி நின்றாடும் தெய்வமே—எனைக்
கைத்தூக்கியாள் தெய்வமே''

என்றும் கீர்த்தனம் மிகவும் பிரசித்தி பெற்றது.

**பதங்களும் நிந்தாஸ்துதிப் பாடல்களும் :**

இவர் இயற்றிய கீர்த்தனங்களில் இரண்டு, பதங்களாக அமைந்துள்ளன. சுருட்டி இராகத்தில் இயற்றப்பட்ட ''ஏதுக்கித்தனை மோடி தான் உமக்கு என்றன் மேலையா?'' என்ற பாடலும், ''என்ன காரியத்துக்கு இந்தப் பேயாண்டி மேல் இச்சைகொண்டாய் மகளே'' என்ற பாடலும் பதங்களாகும்.

இறைவனை இகழ்வதுபோல் புகழ்வது நிந்தாஸ்துதியாகும். ''என்ன பிழைப்பு உந்தன் பிழைப்பையா?'' என்ற பாடலும், ''வீடும் அம்பலமாகி நீரும் அந்தரம் ஆனீர் வேளை பொல்லாப்பாகியோ'' என்ற பாடலும் நிந்தாஸ்துதியாக அமைந்துள்ளன. மாரிமுத்தாப்பிள்ளையின் படைப்புக் களினால் நிந்தாஸ்துதி அமைப்பு பிரபலமடைந்தது.

புலியூர் வெண்பா, தில்லை விடங்கன், ஐயனார் நொண்டி நாடகம் முதலியவை இவர் இயற்றிய வேறு நூற்களாகும்[17].

**அருணாசலக்கவிராயர் :**

இராம நாடகத்தை கீர்த்தனைகளாக இயற்றி இசைத் தமிழுக்குப் பெரும் தொண்டு புரிந்தவர் அருணாசலக்கவிராயர் ஆவார். சீர்காழிக்கு அருகிலுள்ள தில்லையாடி என்னும் சிற்றூரில் இவர் பிறந்தார். இவரது காலம் கி. பி. 1711 முதல் 1779 வரை ஆகும்.

அருணாசலக் கவிராயர் இராமாயணத்தை நன்கு கற்றிருந்தார். சீர்காழிக்கு அருகிலுள்ள சட்டநாதபுரத்தைச் சேர்ந்த வேங்கடராமய்யர், கோதண்டராமையர் என்ற இரு இளைஞர்கள் இவரிடம் கம்பராமாயணம் பாடம் கேட்டனர். இவருடைய புலமையை நன்கு அறிந்த அவர்கள் கம்பராமாயணத்தையே கீர்த்தனங்களாகப் பாடித்தரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள். இதன் விளைவாக அவர் கம்பராமாயணத்தைக் கீர்த்தனங் களாக இயற்ற ஆரம்பித்தார். கம்பருடைய சொல் நயம், பொருள் நயம், கற்பனைத்திறன் முதலியவை எல்லாம் இவருடைய கீர்த்தனைகளிலும் அமைந்திருந்தன. இராமநாடகக்கீர்த்தனைகள் மொத்தம் நூற்றுத் தொண்ணூற்று ஏழு ஆகும். இரண்டு அடிக் கண்ணிகளால் ஆன பாடல்கள் அறுபது ஆகும். தோடையம் என்னும் கடவுள் வணக்கப் பாடல் ஒன்று. விருத்தங்கள் இருநூற்று அறுபத்து எட்டு ஆகும்.

தமிழ்நாட்டில் பல இடங்களில் மகாராட்டிரப் பாணியில் காலட்சேபங்கள் நடந்துவந்தன. அவ்வாறு நிகழ்ச்சிகள் நடத்தும் கலைஞர் களுக்கு இது பயனுடையதாக அமையும் என்பதும், அவருக்குக் கம்ப ராமாயணத்தில் இருந்த ஈடுபாடுமே கவிராயர் இராம நாடகக் கீர்த்தனங்கள் எழுதுவதற்குரிய காரணங்களாகும் எனப் பேராசிரியர் மு. அருணாசலம் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்[18].

திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் திருவரங்கநாதரைத் துதித்துப் பாடிய, மோகன இராகத்தில் அமைந்த

''ஏன் பள்ளி கொண்டீரையா—சீரங்கநாதா—நீர்
ஏன் பள்ளி கொண்டீரையா''

என்னும் இவருடைய கீர்த்தனையைக் கேட்டு இன்புறாதவர்கள் வெகுசிலரே என்று கூறலாம்.

பைரவி இராகத்தில் பாடப்படும்

''ஆரோ இவர் ஆரோ—என்ன
பேரோ அறியேனே''

என்னும் இராமநாடகக் கீர்த்தனை அர்த்தபாவமும் இசை நயமும் கொண்டு விளங்குவதைக் காண்கிறோம்.

சந்தர்ப்பத்திற்கு ஏற்ற இராகத்தில் இசை அமைத்திருப்பது இராமநாடக கீர்த்தனைகளின் சிறப்பாகும். நம் வழக்கில் உள்ள பல இராகங் களிலும் துவஜாவந்தி, மங்கள கௌசிகம், சயிந்தவி போன்ற அபூர்வ இராகங் களிலும் இசை அமைக்கப்பெற்றிருப்பதைக் காண்கிறோம்.

தமிழ் மொழியில் காலட்சேபத்திற்கென்று இயற்றப்பெற்ற முதல் இசைநாடக நூல் இராம நாடகக் கீர்தனங்களேயாகும். இது கி.பி.1771-ஆம் ஆண்டு இயற்றப்பெற்றது. எண்ணற்ற இசைப் புலவர்கள் இராமநாடகக் கீர்த்தனைகளைப்பாடி இன்புறுகின்றனர்.

**சங்கீத மும்மூர்த்திகள் :**

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இசைக்குப் பெரும் தொண்டாற்றியவர்களில் முக்கியமானவர்கள் தியாகராஜர் (1767—1847), முத்துசுவாமிதீட்சிதர் (1776—1835) சியாமா சாஸ்திரிகள் (1762—1827) ஆவர். இவர்கள் மூவரும் பழக்கத்தில் இருந்த எல்லா இராகங்களிலும் பல அபூர்வ இராகங்களிலும் நூற்றுக்கணக்கான கிருதிகளை[19] இயற்றியுள்ளனர். இதன் காரணமாக இவர்கள் மூவரும் சங்கீத மும்மூர்த்திகள் என அழைக்கப்படுகின்றனர்.

இவர்கள் மூவரும் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள திருவாரூரில் பிறந்தவர்கள். இவர்கள் மூவரும் தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். தியாகராஜரும், சியாமா சாஸ்திரிகளும் தெலுங்கிலும், முத்துசுவாமி தீட்சிதர் வடமொழியிலும் பல கிருதிகளை இயற்றியுள்ளனர் இவர்களின் கிருதிகளில் இராகத்தின் முழுவடிவத்தையும் காணலாம். ஒரே இராகத்தில் இவர்கள் இயற்றிய பல கிருதிகள் ஒவ்வொன்றும் தனித்தனி வடிவத்துடன் விளங்குவதைக் காணலாம். இவர்கள் தெலுங்கிலும் வடமொழியிலும் கிருதிகள் இயற்றியுள்ளதால் இம்மொழியில் தேர்ச்சிப் பெறாத தமிழ் மக்கள் இக்கிருதிகளின் சாகித்தியத்தின் சிறப்பை உணர்ந்து பாட இயலவில்லை.

**இயலிசைப் புலவர்களின் அரிய தொண்டு :**

பதினெட்டாம் நூற்றாண்டிலும் அதற்குப் பிற்பட்ட காலத்திலும் பல இயலிசைப் புலவர்கள் நூற்றுக்கணக்கான பாடல்களை இயற்றி இசைத் தமிழின் மேம்பாட்டுக்குத் தொண்டாற்றியுள்ளனர். நந்தன் சரித்திரக் கீர்த்தனை இயற்றிய கோபாலகிருஷ்ண பாரதியார், சர்வசமரசக் கீர்த்தனைகள் புனைந்த மாயூரம் வேதநாயகம் பிள்ளை, ''பெத்தலகேம் குறவஞ்சி'', ''ஞானநொண்டி நாடகம்'' முதலிய படைப்புக்களைத் தந்த தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார், காவடிச்சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியார், திருக்குற்றாலக் குறவஞ்சி பாடிய திரிகூடராசப்பக்கவிராயர், பல அபூர்வ இராகங்களில் கீர்த்தனைகள் இயற்றிய காயக சிகாமணி முத்தையா பாகவதர், பல தமிழ்க்கீர்த்தனைகளை இயற்றிப் பாடிய ஆனை—அய்யா சகோதரர்கள், மகா வைத்தியநாதசிவன், ராமசாமி சிவன், கனம் கிருஷ்ண

அய்யர் ஆகியோரும் மற்றும் பல இயலிசைப் புலவர்களும் இனிய தமிழ்ப் பாடல்களைப் புனைந்து இசைத்தமிழுக்குப் புரிந்த தொண்டு போற்றுவதற்கு உரியதாகும்.

---

1. ஆதாரம் : பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் இயற்றிய ''இசைத்தமிழ்'' என்னும் நூல். (பக்கம் 61-63)

2. ஆதாரம் : பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி இயற்றிய ''South Indian Music Book VI'' (பக்கம் 99-101)

3. ஆதாரம் : 1. கருணாமிர்த சாகரம்—முதல் நூல் பக்கம் 620
   2. தமிழ் இசைச்சங்கம் பண் ஆராய்ச்சிக்கூட்டத்தில் 1949ஆம் ஆண்டு ''பண் வரலாறு'' என்னும் தலைப்பில் திரு ம. ப. பெரியசாமித்தூரன் வாசித்து அளித்த கட்டுரை.

4. ஆதாரம் : விபுலானந்த அடிகள் இயற்றிய யாழ் நூல்—தேவாரவியல் பக்கம் 265 முதல் 268 வரை.

   பேராசிரியர் திரு க. வெள்ளைவாரணனார் இயற்றிய ''இசைத்தமிழ்'' நூல் பக்கம் 87 முதல் 89 வரை.

5. ஆதாரம் : கருணாமிர்த சாகரம்—முதல் நூல்—பக்கம் 196

6. ஆதாரம் : கருணாமிர்த சாகரம்—முதல்நூல்—பக்கம் 621.

7. திருஞானசம்பந்தர் ஆயிரத்து அறுநூறு பதிகங்களும், திருநாவுக்கரசர் நான்காயிரத்து தொள்ளாயிரம் பதிகங்களும், சுந்தரர் மூவாயிரத்து எண்ணூறு பதிகங்களும் பாடியருளி னார்கள். இம்மூவரும் அருளிச்செய்த திருப்பதிகங்களின் தொகை பத்தாயிரத்து முந்நூறு ஆகும். செல்லரித்துச் சிதைந்துபோன பதிகங்கள் போக, எஞ்சியுள்ள பதிகங்கள் எழுநூற்று தொண்ணூற்று ஆறு ஆகும். இவைகளையே, நம்பியாண்டார் நம்பிகள், சோழ மன்னனின் ஆதரவு கொண்டு, முறைப்படுத்தி ஏழு திருமுறைகளாகத் தொகுத்தார் என திருமுறை கண்ட புராணம் கூறுகிறது.

ஆதாரம் : பேராசிரியர் வெள்ளைவாரணனார் இயற்றிய ''இசைத்தமிழ்'' நூல், பக்கம் 67.

8. ஆதாரம் : கருணாமிர்தசாகரம்—முதல் நூல்—பக்கம் 147 முதல் 155 வரை.

9. ஆதாரம் : தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் 1982-ஆம் ஆண்டு நடைபெற்ற இசைக்கருத் தரங்கில் பேராசிரியர் மு. அருணாசலம் அவர்கள் ''தமிழ்நாட்டு இசையின் வரலாறு'' என்ற தலைப்பில் வாசித்தளித்த கட்டுரை.

10, 11. ஆதாரம் : நாலாயிரத்திவ்வியப்பிரபந்தம்—பதிப்பாசிரியர் வித்துவான் கி. வேங்கடசாமி ரெட்டியார் எழுதியுள்ள முகவுரை, பக்கம் 38.

12. ஆதாரம்: டாக்டர் எஸ். இராமநாதன் 1983-ஆம் ஆண்டு தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற இசைக்கருத்தரங்கில் வாசித்தளித்த கட்டுரை.

13. ஆதாரம்: டாக்டர் எஸ். பிரேமலதா 1983-ஆம் ஆண்டு தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற இசைக் கருத்தரங்கில் வாசித்தளித்த கட்டுரை.

14. ஆதாரம்: 'தாள்ளபாக்கம் அன்னமாச்சாரியாரின் சங்கீர்த்தனங்கள்' என்னும் நூலிற்கு அதன் பதிப்பாசிரியர் திரு. டி. எஸ். பார்த்தசாரதி அவர்கள் எழுதியுள்ள முன்னுரை.

15. ஆதாரம். திரு. வி. சீதாராமையா எழுதியுள்ள ''புரந்தரதாசர்'' என்ற நூல்—நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா இதைப்பதிப்பித்துள்ளது.

16, 17. ஆதாரம்: பேராசிரியர் மு. அருணாசலம் எழுதிய ''கர்நாடக சங்கீதத்தின் ஆதி மும்மூர்த்திகள்'' என்னும் நூல். தமிழக அரசு வெளியீடு.

18. ஆதாரம்: கர்நாடக சங்கீதத்தின் ஆதி மும்மூர்த்திகள்.

19. கிருதிகளில் சாகித்தியம் பெரும்பாலும் இறைவனைப் பற்றியதாகவே இருக்கும். ஒருசில கிருதிகள் மகான்களைப் பற்றியோ அல்லது வேறு சிலரைப் பற்றியோ இருக்கும் கிருதிகளில் வார்த்தைகள் கொஞ்சமாகவே இருக்கும். கிருதிகளில் இசை (தாது) முக்கியமானது. இன்சுவையுடன் விளங்கும் இராக சஞ்சாரங்களைக் கொண்டு கிருதிகளின் இசை அமைக்கப்படுகிறது. பல்லவி, அனுபல்லவி, சரணம் முதலியவை கிருதியின் அங்கங்களாகும். சிட்டை சுரமும் ஒருசில கிருதிகளின் அங்கமாக வரும். சரணங்கள் ஒன்றோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டதாகவோ இருக்கலாம். ஒவ்வொரு சரணமும் ஒரே இசை அமைப்பைக் (தாது) கொண்டோ அல்லது வெவ்வேறு வகை இசை அமைப்பைக்கொண்டோ இருக்கலாம்.

கீர்த்தனையில் சாகித்தியம் பெரும்பாலும் பக்தியை மையமாகக் கொண்டிருக்கிறது. ஒருசில கீர்த்தனைகளின் சாகித்தியம் புராண சம்பவங்களை விளக்குவதாகவோ, பக்தர்களைப் பற்றியதாகவோ இருக்கும். கீர்த்தனையில் சாகித்தியம் (மாது) முக்கியமானது. கீர்த்தனையில் அநேக சரணங்கள் இருக்கும். இவையாவும் ஒரே இசை அமைப்பைக் கொண்டதாக இருக்கும். ஒருசில கீர்த்தனைகளில் அனுபல்லவி இராது கீர்த்தனையின் சாகித்தியத்தில் வார்த்தைகள் அதிகமாக இருக்கும்.



# 7

# இராகம்

முத்தமிழில் ஒன்றான இசைத்தமிழ் நமது பழமையான கலைச்செல்வம். வாழையடி வாழையாக இசைத்தமிழை நாம் போற்றிப் பாதுகாத்து வந்திருக்கிறோம். நமது இசை இராகத்தை அடிப்படையாகக் கொண்டது. நாம் கையாளும் பல்வேறு இராகங்களே இந்த இசையின் சிறப்பிற்கு ஆதாரம். பண்டைத்தமிழ் மக்கள் இராகத்தைப் 'பண்' என்று அழைத்தனர்.

**உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் இராகங்கள் :**

நம் உள்ளத்தில் உள்ள கோபம், சோகம், காதல் போன்ற பல்வேறு உணர்ச்சிகளை இந்த இராகங்கள் உணர்த்தும் ஆற்றல் பெற்றவை. உதாரணமாக, காதல் உணர்ச்சியை (நாயக நாயகி பாவம்) சித்திரிப்பதற்கு கமாஸ், காபி, பேஉறாக், நாட்டகுறிஞ்சி, யமுனாகல்யாணி முதலிய இராகங்கள் பயன்படுகின்றன. சோக உணர்ச்சியை உணர்த்துவதற்கு முகாரி, சாவேரி, கேதார கௌளை, சஹானா, நாதநாமக்ரியா, சுபபந்துவராளி போன்ற இராகங்கள் உபயோகப்படுகின்றன. வீர உணர்ச்சியை வெளிப்படுத்த அடாணா போன்ற இராகங்கள் கையாளப்படுகின்றன. தாலாட்டுப் பாடல்களைப் பாடுவதற்கு நீலாம்பரி, குறிஞ்சி, ஆனந்தபைரவி, நவரோஜ் போன்ற இராகங்கள் துணை செய்கின்றன. இறைவனைப் போற்றிப் பாடுவதற்கு அம்சத்வனி, சங்கராபரணம், செஞ்சுருட்டி, கம்பீரநாட்டை, கௌளை, நாட்டை, ஆரபி போன்ற இராகங்கள் பயன்படுவது நமது மரபாகும்,

நமது இசையின் மற்றொரு சிறப்பு என்னவென்றால் காலை, நடுப்பகல், மாலை, இரவு முதலிய நேரங்களில் பாடுவதற்கென்று சில இராகங்கள் குறிக்கப்பெற்றுள்ளன. அதிகாலை நேரத்தில் இறைவனைப் போற்றிப் பாடுவதற்கு பூபாளம், பௌளி, பிலகரி போன்ற இராகங்கள் ஏற்புடையனவாகக் கொள்ளப்படுகின்றன. அதிகாலை நேரத்தில் பூபாள இராகத்தை நாகசுரத்திலோ அல்லது புல்லாங்குழலிலோ நாம் செவியுறும்போது அப்படியே மெய்ம்மறந்து நிற்கிறோம். இந்த இராகங்களுக்கு அத்துணை ஆற்றல் இருக்கிறது. ஓர் இசை நிகழ்ச்சியின் முடிவில் மங்களம் பாடுவதற்குச் சுருட்டி, மத்யமாவதி, சௌராஷ்டிரம் போன்ற இராகங்களில் அமைந்த பாடல்கள் பாடப்படுவது நமது இசை மரபாகும்.

**இராகங்களைப் பற்றிக் கூறும் சில வடமொழி நூற்கள்[1]:**

மதங்கர் என்பவர் தாம் எழுதிய பிரகத்தேசி என்னும் நூலில் 20 இராகங்கள் பற்றிக் கூறியிருக்கிறார். இந்த இராகங்களை இவர் ''ஜாதிகள்'' என்று அழைத்திருக்கிறார். இவர் கி. பி. ஐந்தாவது நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று பேராசிரியர் சாம்பமூர்த்தி கூறியிருக்கிறார். ஆனால் இவர் ஒன்பதாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர் என திரு. ஆர். ரங்கராமானுஜ ஐயங்கார் கூறியிருக்கிறார்[2].

பதினோராவது நூற்றாண்டில் வாழ்ந்த பார்சவதேவர் எழுதிய ''சங்கீத சமயாசாரம்'' என்ற நூலில் 20 இராகாங்க இராகங்களும் மற்றும் பல பாஷாங்க இராகங்கள் பற்றிய விவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

பன்னிரண்டாவது நூற்றாண்டில் எழுதப்பெற்ற நாரதரின் ''சங்கீத மகரந்தம்'' என்னும் நூலில் சூரியன் உதயமாகும் நேரத்தில் பாடப்பட வேண்டிய 20 இராகங்கள், உச்சி வேளையில் பாடப்படவேண்டிய 14 இராகங்கள், இரவில் பாடப்படவேண்டிய 18 இராகங்கள், காலையிலும், மாலையிலும், பாடுவதற்குரிய 10 இராகங்கள் மற்றும் பல நூற்றுக்கும் மேற்பட்ட இராகங்கள் பற்றிய விவரங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

பதின்மூன்றாவது நூற்றாண்டில் வாழ்ந்த சாரங்கதேவர் (1210—1247) இயற்றியுள்ள ''சங்கீத ரத்னாகரம்'' என்ற நூலில் 229 இராகங்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

பதினான்காவது நூற்றாண்டைச் சேர்ந்த வித்யாரண்யர் (1320-1380) எழுதிய ''சங்கீத சாரம்'' என்ற நூலில் 15 மேளங்கள்[3] பற்றிய விவரங்களும், 50 ஜன்ய இராகங்கள் பற்றிய விவரங்களும் காணக்கிடைக்கின்றன.

பதினைந்தாவது நூற்றாண்டில் வாழ்ந்த தாள்ளப்பாக்கம் அன்னமாச்சார்யார் இயற்றிய பாடல்களில் 91 இராகங்கள் கொடுக்கப்பட்டு உள்ளன.

பதினாறாவது நூற்றாண்டில் வாழ்ந்த ராமாமாத்தியர் (1472—1550) என்பவர் ''சுரமேள கலாநிதி'' என்னும் நூலை இயற்றினார். இவர் 20 மேளங்களின் பெயர்களையும் 45 கிளை இராகங்களின் பெயர்களையும் தமது நூலில் குறிப்பிட்டிருக்கிறார்[4].

பதினேழாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சோமநாதர் ''ராகவிபோதம்'' என்ற நூலை கி. பி. 1609-ல் இயற்றினார். இதில் 23 மேளங்கள் பற்றிய விவரங்களையும் மற்றும் கிளை இராகங்கள் பற்றிய விவரங்களையும் தந்துள்ளார்.

வேங்கட மகியின் தந்தையான கோவிந்த தீட்சிதர் தஞ்சையில் அரசாண்ட இரண்டாவது நாயக்க மன்னரான அச்சுதப்ப நாயக்கரிடம் அமைச்சராகப் பணியாற்றினார். (1572—1614) இவர் இயற்றிய ''சங்கீத சுதா'' என்ற நூலில் 50 இராகங்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன[5].

**அரபத்த நாவலரின் "பரத சாஸ்திரம்" நூலில் கூறப்பட்டுள்ள இராகங்கள்[6] :**

இன்றைக்குச் சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த அரபத்த நாவலர் எழுதிய 'பரத சாஸ்திரம்' என்ற நூலில் அவர் காலத்திற்கு முன்பு வழக்கில் இருந்த 176 இராகங்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவைகளில் கீழ்க்கண்ட 32 இராகங்கள் தலைமைபெற்ற இராகங்கள் என்று கூறப்பட்டுள்ளன.

1. மேகவிரஞ்சி
2. குறிஞ்சி
3. பூபாளம்
4. கைசிகம்
5. வராளி
6. மலகரி
7. பல்லதி
8. இந்தோளம்
9. படமஞ்சரி
10. நாராயணி
11. நாட்டை
12. வசந்தம்
13. பௌளி
14. சீராகம்
15. பங்காளம்
16. கூர்ச்சரி
17. கௌளி
18. காந்தாரி
19. காம்போதி
20. இலலிதை

21. தேவக்கிரியை
22. தேசாக்ஷரி
23. மாளவி
24. சாவேரி
25. தேசி
26. சாரங்கம்
27. தோடி
28. இராமக்கிரியை
29. வேளாவளி
30. பைரவி
31. குண்டக்கிரியை
32. தன்னியாசி

அபிதான சிந்தாமணி[7] என்ற பொருளகராதி நூலிலும் இந்த 32 தலைமை பெற்ற இராகங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்த 32 தலைமைபெற்ற இராகங்களில் 8 இராகங்கள் புருட இராகங்கள் என்றும், 24 இராகங்கள் 'ஸ்திரீ இராகங்கள்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன.

| புருட இராகம் | ஸ்திரீ இராகம் |
|---|---|
| 1. பைரவி | 1. தேவக்கிரியை |
| | 2. மேகவிரஞ்சி |
| | 3. குறிஞ்சி |
| 2. பூபாளம் | 1. வேளாவளி |
| | 2. மலகரி |
| | 3. பௌளி |
| 3. சீராகம் | 1. இந்தோளம் |
| | 2. பல்லதி |
| | 3. சாவேரி |
| 4. படமஞ்சரி | 1. தேசி |
| | 2. இலலிதை |
| | 3. தோடி |
| 5. வசந்தம் | 1. இராமக்கிரியை |
| | 2. வராளி |
| | 3. கைசிகம் |
| 6. மாளவி | 1. குண்டக்கிரியை |
| | 2. நாராயணி |
| | 3. கூர்ச்சரி |

| புருட இராகம் | | ஸ்திரீ இராகம் |
|---|---|---|
| 7. பங்காளம் | 1. | தன்னியாசி |
| | 2. | காம்போதி |
| | 3. | கௌளி |
| 8. நாட்டை | 1. | தேசாட்சரி |
| | 2. | காந்தாரம் |
| | 3. | சாரங்கம் |

மேலும் சோக உணர்ச்சியை வெளிப்படுத்துவதற்கு ஆகிரி, கண்டாரவம், நீலாம்பரி, பியாகடை, புன்னாகவராளி, வராளி ஆகிய இராகங்களும், மகிழ்ச்சியைத் தெரிவிக்க காம்போதி, தன்னியாசி, சாவேரி ஆகிய இராகங்களும், வீர உணர்ச்சியைப் பிரதிபலிப்பதற்கு நாட்டை இராகமும் பயன்படுத்தப்பட்டன என்று இந்நூல் ஆசிரியர் கூறியிருக்கிறார். அக்காலத்தில் விடியற்கால நேரத்தில் இந்தோளம், இராமகலி, நாட்டை, பூபாளம் ஆகிய இராகங்களும், மாலை நேரத்தில் கல்யாணி, காபி, கன்னடம், காம்போதி ஆகிய இராகங்களும், நடுமத்தியான நேரத்தில் சாரங்கம், தேசாட்சரி இராகங்களும், நடுநிசி நேரத்தில் ஆகிரி இராகமும் பாடப்பட்டதாகத் தெரிகிறது.

**பூர்வ தமிழ்நாட்டில் வழக்கிலிருந்த 32 தாய் இராகங்கள் :**

வேங்கடமகி வாழ்ந்த 17-ம் நூற்றாண்டிற்கு முன்புள்ள காலத்தில் பூர்வ தமிழ் மக்கள் 32 தாய் இராகங்களையே பாடி வந்தனர் என 'பூர்வீக சங்கீத உண்மை'[8] என்ற நூலில் நாகசுர வித்துவான் திரு. எம். கே. எம். பொன்னுச்சாமிபிள்ளை கூறியிருக்கிறார்.

**32 தாய் இராகங்கள் அமைக்கப்பட்ட முறை :**

| | | |
|---|---|---|
| துத்தம் அல்லது ரிஷபம் | — | சுத்த ரிஷபம், சதுச்ருதி ரிஷபம் என இரண்டு வகைப்படும். |
| கைக்கிளை அல்லது காந்தாரம் | — | சாதாரண காந்தாரம், அந்தர காந்தாரம் என இருவகைப்படும் |
| விளரி அல்லது தைவதம் | — | சுத்த தைவதம், சதுச்ருதி தைவதம் என இருவகைப்படும். |
| தாரம் அல்லது நிஷாதம் | — | கைசிகி நிஷாதம், காகலி நிஷாதம் என இருவகைப்படும். |

ரிஷபம், காந்தாரம் ஆகிய ஒவ்வொரு சுரத்திலும் இரண்டு பேதங்களாக நான்கு பேதங்கள் இவ்வாறு உண்டாகின்றன.

1. சுத்த ரிஷபமும் சாதாரண காந்தாரமும்.
2. சுத்த ரிஷபமும் அந்தர காந்தாரமும்.
3. சதுச்ருதி ரிஷபமும் சாதாரண காந்தாரமும்.
4. சதுச்ருதி ரிஷபமும் அந்தர காந்தாரமும்.

இதேபோல் பஞ்சமத்திற்கு மேலே உள்ள சுரங்களான தைவதம், நிஷாதம் ஆகிய ஒவ்வொரு சுரத்திலும் இரண்டு பேதங்களாக நான்கு பேதங்கள் உண்டாகின்றன.

1. சுத்த தைவதமும் கைசிகி நிஷாதமும்.
2. சுத்த தைவதமும் காகலி நிஷாதமும்.
3. சதுச்ருதி தைவதமும் கைசிகி நிஷாதமும்.
4. சதுச்ருதி தைவதமும் காகலி நிஷாதமும்.

ரிஷபம், காந்தாரம் ஆகிய சுரங்களின் நான்கு பேதங்கள் ஒவ்வொன்றிற்கும் தைவதம், நிஷாதம் ஆகிய சுரங்களில் நான்கு பேதங்கள் ஏற்படும் பொழுது $4 \times 4 = 16$ பேதங்கள் ஏற்படுகின்றன. சுத்த மத்யமம், பிரதி மத்யமம், என்னும் மத்யமத்தின் இரு பேதங்களால் $16 \times 2 = 32$ இராகங்கள் உண்டாகின்றன.

## பூர்வ தமிழ்நாட்டில் வழங்கிவந்த 32 தாய் இராகங்கள்

| இராகங்கள் | சுரங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. அனுமத்தோடி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 2. தேனுக | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 3. நாடகப்ரியை | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 4. கோகிலப்ரியை | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 5. வகுளாபரணம் | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 6. மாயாமாளவகௌளா | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 7. சக்ரவாகம் | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 8. சூர்யகாந்தம் | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |

| | இராகங்கள் | சுரங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 9. | நடபைரவி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 10. | கீரவாணி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 11. | கரகரப்பிரியை | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 12. | கௌரீமனோகரி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 13. | சாருகேசி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 14. | சரசாங்கி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 15. | அரிகாம்போதி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 16. | தீரசங்கராபரணம் | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 17. | பவப்பிரியா | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 18. | சுபபந்துவராளி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 19. | ஷட்விதமார்கினி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 20. | சுவர்ணாங்கி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 21. | நாமநாராயணி | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 22. | காமவர்த்தினி | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 23. | ராமப்பிரியா | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 24. | கமனப்பிரியா | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 25. | ஷண்முகப்பிரியை | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 26. | ஸிம்மேந்திர மத்யமம் | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 27. | ஹேமவதி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 28. | தர்மவதி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 29. | ரிஷபப்பிரியா | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 30. | லதாங்கி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 31. | வாசஸ்பதி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 32. | மேசகல்யாணி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |

## 72 மேளகர்த்தா இராகங்கள் :

பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சையில் அரசாண்ட விஜயராகவ நாயக்கரிடம் *(1633—1673)* அமைச்சராகப் பணியாற்றிய வேங்கடமகி

என்பவர் 1660-ம் ஆண்டு ''சதுர்த்தண்டிப் பிரகாசிகை'' என்னும் இசை இலக்கண நூலை இயற்றினார். இந்நூல் வீணை, சுருதி, சுரம், மேளம், இராகம், ஆலாபனை, தாயம், கீதம், பிரபந்தம், தாளம் முதலியவற்றை விளக்கும் பத்து அத்தியாயங்கள் கொண்டது. 72 மேளகர்த்தா இராகங்களை முதன்முதலாக அமைத்தவர் இவர்தான்[9]. இவர் பல கீதங்களையும் பிரபந்தங்களையும் இயற்றியிருக்கிறார். திருவாரூர் தியாகராஜப்பெருமான் பேரில் 24 அஷ்டபதிகள் இவர் எழுதியிருக்கிறார். இசை, வடமொழி, சோதிடம் போன்ற பல்வேறு துறைகளில் இவர் புலமை பெற்றிருந்தார்.

வேங்கடமகி அமைத்த 72 மேளகர்த்தா இராகங்களில் 19 கர்த்தா இராகங்களே அக்காலத்தில் பிரசித்தமாக இருந்தன என்று இவர் கூறியிருக்கிறார். மீதமுள்ள 53 மேளகர்த்தா இராகங்கள் பிற்காலத்தில் பிரசித்தியாக வரக்கூடியவை என்று வேங்கடமகி குறிப்பிட்டிருக்கிறார்.

தஞ்சையை ஆண்ட முதலாவது துளஜா மன்னன் (1728—1736) எழுதிய ''சங்கீத சாராம்ருதம்'' என்னும் வடமொழி இசை நூலில் வேங்கடமகியின் 72 மேளகர்த்தா பற்றிக் கூறப்பட்டிருக்கிறதே தவிர 72 மேளகர்த்தா இராகங்களின் பெயர்கள் அதில் காணப்படவில்லை.

பதினெட்டாவது நூற்றாண்டில் வாழ்ந்த கோவிந்தாச்சாரியார் இயற்றிய ''சங்க்ரக சூடாமணி'' என்னும் வடமொழி இசை நூலில் தற்பொழுதுள்ள கனகாங்கி, ரத்னாங்கி முதலிய பெயர்கள் கொண்ட 72 மேளகர்த்தாக்களின் பெயர்கள் காணக்கிடக்கின்றன. சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜர் இந்த முறையையே பின்பற்றினார் எனத் தெரிகிறது.

மேளகர்த்தா இராகம், மேள இராகம், கர்த்தா இராகம், சம்பூர்ண இராகம், தாய் இராகம் என்று பல பெயர்களில் அழைக்கப்படுகிறது. மேளகர்த்தா இராகங்களில் ஏழு சுரங்களும் ஆரோசையிலும், அமரோசையிலும் வரிசைக்கிரமமாக வரும். ஆரோசையியில் எந்த வகையான சுரங்கள் வருகின்றனவோ அதே வகையான சுரங்கள் அமரோசையிலும் வரும்.

**72 மேளகர்த்தா இராகங்கள் அமைக்கப்பட்ட முறை :**

துத்தம் அல்லது ரிஷபம், சுத்த ரிஷபம், சதுச்ருதி ரிஷபம், ஷட்சுருதி ரிஷபம் என மூன்று வகைப்படும்.

கைக்கிளை அல்லது காந்தாரம், சுத்த காந்தாரம், சாதாரண காந்தாரம், அந்தர காந்தாரம் என மூன்று வகைப்படும்.

இதில் சதுச்ருதி ரிஷபமும், சுத்த காந்தாரமும் ஒரே சுரம்தான். பெயர்கள்தான் வேறு. சரிகமபதநி என்னும் ஏழு சுரங்களும் ஒரு தாய் இராகத்தில் வரவேண்டும் என்பதற்காக இவ்வாறு பெயர் கொடுக்கப்பட்டு உள்ளது.

இதேபோல் ஷட்சுருதி ரிஷபமும், சாதாரண காந்தாரமும் ஒரே சுரம்தான்.

விளரி அல்லது தைவதம், சுத்த தைவதம், சதுச்ருதி தைவதம், ஷட்சுருதி தைவதம் என மூன்று வகைப்படும்.

தாரம் அல்லது நிஷாதம், சுத்த நிஷாதம், கைசிகி நிஷாதம், காகலி நிஷாதம் என மூன்று வகைப்படும்.

இதில் சதுச்ருதி தைவதமும், சுத்த நிஷாதமும் ஒரே சுரத்தைத்தான் குறிக்கின்றன. இதேபோல் ஷட்சுருதி தைவதமும், கைசிகி நிஷாதமும் ஒரே சுரம்தான் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும்.

1. சுத்த ரிஷபமும் சுத்த காந்தாரமும் ($ரி^2$, $க^2$)
2. சுத்த ரிஷபமும் சாதாரண காந்தாரமும் ($ரி^2$, $க^4$)
3. சுத்த ரிஷபமும் அந்தர காந்தாரமும் ($ரி^2$, $க^6$]
4. சதுச்ருதி ரிஷபமும் சாதாரண காந்தாரமும் ($ரி^4$, $க^4$)
5. சதுச்ருதி ரிஷபமும் அந்தர காந்தாரமும் ($ரி^4$, $க^6$)
6. ஷட்சுருதி ரிஷபமும் அந்தர காந்தாரமும் ($ரி^6$, $க^6$)

1. சுத்த தைவதமும் சுத்த நிஷாதமும் ($த^2$, $நி^2$)
2. சுத்த தைவதமும் கைசிகி நிஷாதமும் ($த^2$, $நி^4$)
3. சுத்த தைவதமும் காகலி நிஷாதமும் ($த^2$, $நி^6$)
4. சதுச்ருதி தைவதமும் கைசிகி நிஷாதமும் ($த^4$, $நி^4$)
5. சதுச்ருதி தைவதமும் காகலி நிஷாதமும் ($த^4$, $நி^6$)
6. ஷட்சுருதி தைவதமும் காகலி நிஷாதமும் ($த^6$, $நி^6$)

ரிஷபம், காந்தாரம் ஆகிய ஒவ்வொரு சுரத்திலும் மூன்று பேதங்களாக மொத்தம் ஆறு பேதங்கள் உண்டாகின்றன. இவை ஒவ்வொன்றிற்கும் பஞ்சமத்திற்கு மேலே உள்ள சுரங்களான தைவதத்திற்கும் நிஷாதத்திற்கும் ஏற்படும் ஆறு பேதங்கள் உண்டாவதைக் கணக்கிடும்போது $6 \times 6 = 36$ பேதங்கள் அல்லது இராகங்கள் ஏற்படுகின்றன. சுத்த மத்யமம், பிரதி மத்யமம் என்னும் மத்யமத்தின் இருபேதங்களால் $36 \times 2 = 72$ இராகங்கள் உண்டாகின்றன.

**விவாதி மேளங்கள் :**

*சுத்த காந்தாரம், ஷட் சுருதி ரிஷபம், சுத்த நிஷாதம், ஷட்சுருதி தைவதம் என்னும், நான்கு சுரங்களும் விவாதி சுரங்கள் என்று அழைக்கப் படுகின்றன. இந்த நான்கு விவாதி சுரங்களில் ஏதாவது ஒன்று அல்லது இரண்டு சுரங்கள் வரும் மேளத்திற்கு விவாதி மேளம் என்று பெயர். இரண்டு விவாதி சுரங்களுக்கு மேல் ஒரு மேளத்தில் வராது. இரண்டு விவாதி சுரங்கள் வந்தால் அதில் ஒன்று ஓர் இயக்கின் முற்பகுதியிலும் (பூர்வாங்கம்), மற்றொன்று பிற்பகுதியிலும் (உத்தராங்கம்) வரும். விவாதி மேளங்களின் மொத்த எண்ணிக்கை நாற்பது ஆகும். இரண்டு விவாதி சுரங்கள் வரும் மேளங்கள் எட்டு ஆகும். அவைகளின் எண்கள் 1, 6, 31, 36, 37, 42, 67, 72 ஆகும். மீதமுள்ள முப்பத்திரண்டு மேளங்களிலும் விவாதி சுரங்கள் வரா.*

**கிளை இராகங்கள் :**

*மேளகர்த்தா இராகங்கள் அல்லது தாய் இராகங்களில் பிறந்த இராகங்களைக் கிளை இராகங்கள் அல்லது ஜன்னிய இராகங்கள் என்று அழைக்கிறோம். ஒவ்வொரு மேளகர்த்தா இராகத்திலிருந்தும் பல கிளை இராகங்கள் பிறந்திருக்கின்றன. தாய் இராகத்தில் எந்த வகையான சுரங்கள் வருகின்றனவோ அவையே கிளை இராகங்களிலும் வரும். உதாரணமாக அம்சத்தொனி இராகத்தை எடுத்துக்கொள்வோம். இது 29-வது தாய் இராகமான தீரசங்கராபரணத்தில் பிறந்தது. தீரசங்கராபரணத்தில் வரும் துத்தம் (ரிஷபம்), கைக்கிளை (காந்தாரம்), தாரம் (நிஷாதம்) ஆகிய சுரங்களே அம்சத்தொனி இராகத்திலும் வருகின்றன.*

**மூன்றுவகை கிளை இராகங்கள் :**

*கிளை இராகங்கள் வர்ஜ இராகங்கள், வக்கிர இராகங்கள், பாஷாங்க இராகங்கள் என மூன்று வகைப்படும்.*

**வர்ஜ இராகம்[10] :**

*ஓர் இராகத்தின் ஆரோசையிலாவது, அமரோசையிலாவது அல்லது இரண்டிலுமாவது ஒரு சுரம் அல்லது இரண்டு சுரங்கள் விலக்கப்பட்டிருந்தால் அது வர்ஜ இராகம் என்று அழைக்கப்படுகிறது. ஆறு சுரங்களையுடைய ஆரோசை அல்லது அமரோசைக்கு பண்ணியல்[11] அல்லது ஷாடவம் என்று பெயர். ஐந்து சுரங்களையுடைய ஆரோசை அல்லது அமரோசைக்கு திறம் அல்லது ஔடவம் என்று பெயர். மூன்று சுரங்கள் விலக்கப்பட்ட கிளை இராகங்களுக்குத் திறத்திறம் அல்லது சுராந்தரம் என்று பெயர். மூன்று சுரங்கள் விலக்கப்பட்ட கிளை இராகங்கள் மிகவும் சொற்பமானவை.*

உதாரணம்: 28 வது மேளமாகிய அரிக்காம்போதியில் பிறந்த நவரசக் கன்னடா இராகம்.

ஆரோசை — ச க ம ப ச்
அமரோசை — ச் நி த ம க ரி ச

ஓர் இராகத்தின் ஆரோசையிலாவது அல்லது அமரோசையிலாவது ஏழு சுரங்கள் வந்தால் அதைப் 'பண்' அல்லது 'சம்பூரணம்' என்று கூறுகிறோம்.

**வர்ஜ இராகங்களின் வகைகள்:**

வர்ஜ இராகங்கள் எட்டு வகைப்படும். அவையாவன:

1. பண்ணியல்—பண் (ஷாடவ—சம்பூரணம்)
ஆரோசையில் ஆறு சுரங்களும், அமரோசையில் ஏழு சுரங்களும் வரும்.

உதாரணம்: 28-வது தாய் இராகமான அரிகாம்போதியில் பிறந்த காம்போதி இராகம்.

ஆ. ச ரி க ம ப த ச்
அ. ச் நி த ப ம க ரி ச

2. பண்—பண்ணியல் (சம்பூரண—ஷாடவம்)
ஆரோசையில் ஏழு சுரங்களும் அமரோசையில் ஆறு சுரங்களும் வரும்.

உதாரணம்: 17-வது மேளகர்த்தாவான சூரியகாந்தம் இராகத்தில் பிறந்த பைரவம் இராகம்.

ஆ. ச ரி க ம ப த நி ச்
அ. ச் தா ப ம க ரி ச

3. திறம்—பண் (ஔடவ—சம்பூரணம்)
ஆரோசையில் ஐந்து சுரங்களும், அமரோசையில் ஏழு சுரங்களும் வரும்.

உதாரணம்[12]: 29-வது மேளமான தீர சங்கராபரணத்தில் பிறந்த பிலகரி இராகம்.

ஆ, ச ரி க ப த ச்
அ. ச் நி த ப ம க ரி ச

4. பண்——திறம் (சம்பூரண—ஔடவம்)
ஆரோசையில் ஏழு சுரங்களும், அமரோசையில் ஐந்து சுரங்களும் கொண்ட இராகம்.

உதாரணம்: 20-வது தாய் இராகமான நடபைரவியில் பிறந்த சாரமதி இராகம்.
ஆ. ச ரி க ம ப த நி ச்
அ. ச் நி த ம க ச

5. பண்ணியல்——பண்ணியல் (ஷாடவ—ஷாடவம்) ஆரோசையிலும் அமரோசையிலும் ஆறு சுரங்கள் வரும்.

உதாரணம்: 22-வது கர்த்தா இராகமான கரகரப்ரியாவில் பிறந்த ஸ்ரீரஞ்சனி இராகம்.
ஆ. ச ரி க ம த நி ச்
அ. ச் நி த ம க ரி ச

6. பண்ணியல்——திறம் (ஷாடவ ஔடவம்)
ஆரோசை ஆறு சுரங்கள் கொண்டது.
அமரோசை ஐந்து சுரங்கள் கொண்டது.

உதாரணம்: 28-வது மேளகர்த்தாவான அரிகாம்போதியில் பிறந்த நாட குறிஞ்சி இராகம்.
ஆ. ச ரி க ம த நி ச்
அ. ச் நி த ம க ச

7. திறம்——திறம் (ஔடவ——ஔடவம்)
ஆரோசையிலும், அமரோசையிலும் ஐந்து சுரங்கள் வரும்.
உதாரணம்: 28வது தாய் இராகமான அரிகாம்போதியில் பிறந்த மோகன இராகம்.
ஆ. ச ரி க ப த ச்
அ. ச் த ப க ரி ச

8. திறம்——பண்ணியல் (ஔடவ——ஷாடவம்)
ஆரோசையில் ஐந்து சுரங்களும், அமரோசையில் ஆறு சுரங்களும்
உதாரணம்: 15வது மேளகர்த்தாவான மாயாமாளவகௌளை இராகத்தில் பிறந்த மலகரி இராகம்.
ஆ. ச ரி ம ப த ச்
அ. ச் த ப ம க ரி ச

**வக்கிர இராகம் :**

ஓர் இராகத்தின் ஆரோசையிலாவது, அமரோசையிலாவது அல்லது இரண்டிலுமாவது சுரங்கள் நேராய் வராமல், திரிந்து வரும் இராகங்கள் வக்கிர இராகங்கள் என்று அழைக்கப்படுகின்றன,

வக்கிர இராகங்களைப் ''பிறழ்ச்சிப் பண்கள்[13]'' என்றும் அழைக்கலாம். வக்கிர இராகங்கள் மூன்று வகைப்படும்.

1) ஆரோசையில் மட்டும் வக்கிரம் வருவது.

உதாரணம்[14] : 20-வது மேளகர்த்தாவான நடபைரவி இராகத்தில் பிறந்த ஆனந்த பைரவி இராகம்.

ஆ. ச க ரி க ம ப த ப ச்
அ. ச் நி த ப ம க ரி ச

2. அமரோசையில் மட்டும் வக்கிரம் வருவது.

உதாரணம் : 65வது தாய் இராகமான மேசகல்யாணியில் பிறந்த சாரங்க இராகம்.

ஆ. ச ரி க ம ப த நி ச்
அ. ச் நி த ப ம ரி க ம ரி ச

3. ஆரோசை, அமரோசை ஆகிய இரண்டிலும் வக்கிரம் வருவது.

உதாரணம்: 28வது மேளமான அரிகாம்போதியில் பிறந்த சஹானா இராகம்.

ஆ. ச ரி க ம ப ம தா நி ச்
அ. ச் நி த ப ம கா ம ரீ க ரி ச

**பாஷாங்க இராகங்கள் :**

சில கிளை இராகங்களில், அவைகளின் தாய் இராகங்களில் வராத சுரங்கள் இன்சுவையின் (ரஞ்சகம்) பொருட்டு வருகின்றன. இவ்வகையான கிளை இராகங்கள் பாஷாங்க இராகங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவை ''இடைப்பிறவரல் பண்கள்''[15] என்றும் அழைக்கப்படுகின்றன.

உதாரணம் : 65வது மேளகர்த்தாவான மேசகல்யாணி இராகத்தில் பிறந்த சாரங்க இராகம்.

ஆ. ச ரி க ம ப த நி ச்
அ. ச் நி த ப ம ரி க ம ரி ச

இந்த இராகத்தில் ரி க ம ரி ச என்ற வழக்கில் (பிரயோகம்) அன்னிய சுரமாகிய சுத்த மத்யமம் வருகிறது. ஆகவே சாரங்க இராகம் ஒரு பாஷாங்க இராகமாகிறது.

பைரவி, பிலகரி, சாரங்க, காம்போதி, நீலாம்பரி போன்ற இராகங்களை பாஷாங்க இராகத்தின் உதாரணங்களாகக்கொள்ளலாம்.

தாய் இராகத்தின் சுரங்களையே கொண்டுவரும் கிளை இராகங்களுக்கு உபாங்க இராகங்கள் என்று பெயர்.

**பாஷாங்க இராகங்களின் வகைகள் :**

பாஷாங்க இராகங்கள் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

1. ஏகான்ய சுர பாஷாங்க இராகம்—ஓர் அன்னிய சுரத்தை உடைய பாஷாங்க இராகம்.

   உதாரணம்: பைரவி, முகாரி, சாரங்க

2. துவி அன்னிய சுர பாஷாங்க இராகம்—இரண்டு அன்னிய சுரங்களை உடைய பாஷாங்க இராகம்.

   உதாரணம்: இந்துஸ்தான் பேஹாக்.

3. திரி அன்னிய சுர பாஷாங்க இராகம்—மூன்று அன்னிய சுரங்களை உடைய பாஷாங்க இராகம்.

   உதாரணம்: இந்துஸ்தான் காபி.

பாஷாங்க இராகங்கள் மற்றொரு முறையில் இரண்டு வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன.

1. ஆரோசை, அமரோசையிலேயே அன்னிய சுரத்தை உடைய பாஷாங்க இராகங்கள்.

   உதாரணம்: பைரவி. முகாரி, சாரங்க

2. ஆரோசை, அமரோசை சுரங்களைப் பாடும்போது அன்னிய சுரம் ஒலிக்காமல் இராகத்தின் போக்குகளில் (சஞ்சாரம்) மட்டும் அன்னிய சுரம் ஒலிக்கும் பாஷாங்க இராகம்.

   உதாரணம்: காம்போதி, பிலகரி, நீலாம்பரி.

காம்போதி இராகத்தில் ச்ா நி ப த ச்ா என்னும் வழக்கில் (பிரயோகம்) மட்டும் அன்னிய சுரமான காகலி நிஷாதம் வருகிறது.

**கிளை இராகங்களின் எண்ணிக்கை :**

ஒரு மேளகர்த்தா அல்லது தாய் இராகத்தில் வர்ஜ, வக்கிர பேதங்கள் மூலம் எண்ணற்ற கிளை இராகங்கள் பிறக்கின்றன. வர்ஜ பேதங்கள் மூலம் உண்டாகும் கிளை இராகங்களைக் காண்போம்.

முதலாவதாக பண்ணியல்—பண் (ஷாடவ—சம்பூரணம்) இராகங்களை எடுத்துக்கொள்வோம். பண்ணியல்—பண் முறையில் ஆறு கிளை இராகங்கள் இவ்வாறு பிறக்கின்றன.

| | ஆரோசை | அமரோசை |
|---|---|---|
| 1. | ச ரி க ம ப த ச் | ச் நி த ப ம க ரி ச |
| 2. | ச ரி க ம ப நி ச் | ,, ,, |
| 3. | ச ரி க ம த நி ச் | ,, ,, |
| 4. | ச ரி க ப த நி ச் | ,, ,, |
| 5. | ச ரி ம ப த நி ச் | ,, ,, |
| 6. | ச க ம ப த நி ச் | ,, ,, |

இதேபோல் பண்—பண்ணியல் முறையிலும் (சம்பூரண—ஷாடவம்) ஆறு கிளை இராகங்கள் பிறக்கின்றன.

திறம்—பண் (ஔடவ—சம்பூரண) முறையில் இவ்வாறு 15 கிளை இராகங்கள் பிறக்கின்றன.

| | ஆரோசை | அமரோசை |
|---|---|---|
| 1. | ச ரி க ம ப ச் | ச் நி த ப ம க ரி ச |
| 2. | ச ரி க ம த ச் | ,, ,, |
| 3. | ச ரி க ம நி ச் | ,, ,, |
| 4. | ச ரி க ப த ச் | ,, ,, |
| 5. | ச ரி க ப நி ச் | ,, ,, |
| 6. | ச ரி க த நி ச் | ,, ,, |
| 7. | ச ரி ம ப த ச் | ,, ,, |
| 8. | ச ரி ம ப நி ச் | ,, ,, |
| 9. | ச ரி ம த நி ச் | ,, ,, |
| 10. | ச ரி ப த நி ச் | ,, ,, |

| ஆரோசை | அமரோசை |
|---|---|
| 11. ச க ம ப த ச் | ச் நி த ப ம க ரி ச |
| 12. ச க ம ப நி ச் | ,, ,, |
| 13. ச க ம த நி ச் | ,, ,, |
| 14. ச க ப த நி ச் | ,, ,, |
| 15. ச ம ப த நி ச் | ,, ,, |

இதேபோல் பண்—திறம் (சம்பூரண—ஔடவம்) முறையில் 15 கிளை இராகங்கள் கிடைக்கின்றன.

பண்ணியல்—பண்ணியல் (ஷாடவ—ஷாடவம்) இராகங்கள் இவ்வாறு பிறக்கின்றன.

| ஆரோசை | அமரோசை |
|---|---|
| 1. ச ரி க ம ப த ச் | ச் த ப ம க ரி ச |
| 2. ச ரி க ம ப நி ச் | ச் நி ப ம க ரி ச |
| 3. ச ரி க ம த நி ச் | ச் நி த ம க ரி ச |
| 4. ச ரி க ப த நி ச் | ச் நி த ப க ரி ச |
| 5. ச ரி ம ப த நி ச் | ச் நி த ப ம ரி ச |
| 6. ச க ம ப த நி ச் | ச் நி த ப ம க ச |

ஆரோசையில் வரும் ஒவ்வொரு சுரத்தொடருடன்கூட அமரோசையில் உள்ள ஆறு சுரத்தொடர்களும் வரலாம். ஆகவே $6 \times 6 = 36$. பண்ணியல்—பண்ணியல் (ஷாடவ—ஷாடவம்) இராகங்கள் பிறக்கின்றன.

திறம்—திறம் (ஔடவ—ஔடவம்) இராகங்கள் இவ்வாறு உண்டாகின்றன.

| ஆரோசை | அமரோசை |
|---|---|
| 1. ச ரி க ம ப ச் | ச் ப ம க ரி ச |
| 2. ச ரி க ம த ச் | ச் த ம க ரி ச |
| 3. ச ரி க ம நி ச் | ச் நி ம க ரி ச |
| 4. ச ரி க ப த ச் | ச் த ப க ரி ச |
| 5. ச ரி க ப நி ச் | ச் நி ப க ரி ச |
| 6. ச ரி க த நி ச் | ச் நி த க ரி ச |

| ஆரோசை | அமரோசை |
|---|---|
| 7. சரிமபதச் | ச்தபமரிச |
| 8. சரிமபநிச் | ச்நிபமரிச |
| 9. சரிமதநிச் | ச்நிதமரிச |
| 10. சரிபதநிச் | ச்நிதபரிச |
| 11. சகமபதச் | ச்தபமகச |
| 12. சகமபநிச் | ச்நிபமகச |
| 13. சகமதநிச் | ச்நிதமகச |
| 14. சகபதநிச் | ச்நிதபகச |
| 15. சமபதநிச் | ச்நிதபமச |

ஆரோசையில் வரும் ஒவ்வொரு சுரத்தொடருடன் கூட அமரோசையில் உள்ள 15 சுரத்தொடர்களும் வரலாம். ஆகவே 15×15=225 திறம்—திறம் கிளை இராகங்கள் பிறக்கின்றன.

திறம்—பண்ணியல் (ஔடவ—ஷாடவம்) இராகங்கள் 15×6=90 கிளை இராகங்கள் கிடைக்கின்றன.

இதேபோல் பண்ணியல்—திறம் (ஷாடவ—ஔடவம்) இராகங்கள் 6×15=90 கிளை இராகங்கள் உண்டாகின்றன.

**ஒரு தாய் இராகத்தில் பிறக்கும் வர்ஜ இராகங்கள் :**

| | | |
|---|---|---|
| 1. | பண்ணியல்—பண் (ஷாடவ—சம்பூரணம்) இராகங்கள் | — 6 |
| 2. | பண்—பண்ணியல் (சம்பூரண—ஷாடவம்) இராகங்கள் | — 6 |
| 3. | திறம்—பண் (ஔடவ—சம்பூரணம்) இராகங்கள் | — 15 |
| 4. | பண்—திறம் (சம்பூரண—ஔடவம்) இராகங்கள் | — 15 |
| 5. | பண்ணியல்—பண்ணியல் (ஷாடவ—ஷாடவம்) இராகங்கள் | — 36 |
| 6. | திறம்—திறம் (ஔடவ—ஔடவம்) இராகங்கள் | — 225 |
| 7. | திறம்—பண்ணியல் (ஔடவ—ஷாடவம்) இராகங்கள் | — 90 |
| 8. | பண்ணியல்—திறம் (ஷாடவ—ஔடவம்) இராகங்கள் | — 90 |
| | வர்ஜ இராகங்கள் மொத்தம் | 483 |

வர்ஜ பேதங்கள் மூலம் கிடைக்கும் மொத்த கிளை இராகங்கள் 483 ஆகும். இதில் ஆரோசையிலோ அமரோசையிலோ நான்கு சுரங்கள் வரும் சுராந்தர இராகங்கள் சேர்க்கப்படவில்லை.

**வக்கிர பேதங்கள் மூலம் கிடைக்கும் கிளை இராகங்கள் :**[16]

சம்பூரண இராகத்தில் 38 வக்கிர பேதமுள்ள இராகங்கள் கிடைக்கின்றன. பண்ணியல்—பண்ணியல் (ஷாடவ—ஷாடவம்) இராகங்களில் வக்கிர பேதங்களினால் 144 கிளை இராகங்கள் பிறக்கின்றன. இதேபோல் திறம்—திறம் (ஔடவ—ஔடவம்) இராகங்களில் வக்கிர பேதங்களினால் 210 கிளை இராகங்கள் உண்டாகின்றன.

**வர்ஜ—வக்கிர பேதங்கள் மூலம் கிடைக்கும் கிளை இராகங்கள் :**

முன்பு குறிப்பிட்ட வக்கிர பேதங்கள் பல்வேறு வர்ஜ பேதங்களோடு சேர்ந்து வரும் போது 1, 71, 395 கிளை இராகங்கள் ஒரு மேளகர்த்தா இராகத்தில் பிறக்கின்றன. (பின்வரும் அட்டவணையைப் பார்க்கவும்.)

72 மேளகர்த்தா இராகங்களில் 72×1, 71, 395=1, 23, 40, 440 கிளை இராகங்கள் பிறக்கின்றன. இதனோடு 72 மேளகர்த்தா இராகங்களையும் சேர்க்கும்போது மொத்த இராகங்களின் எண்ணிக்கை 1, 23, 40, 512 ஆகிறது. இதில் சுராந்தர இராகங்களும், பாஷாங்க இராகங்களும் சேர்க்கப் படவில்லை. அவைகளையும் சேர்த்தால் பலகோடி கிளை இராகங்கள் பிறக்கும்.

**சம்பூரண, வர்ஜ (ஷாடவ, ஔடவ) வக்கிர இராகங்களின் மொத்த எண்ணிக்கை :**[17]

| எண். | இராக வகைகள் | எண்ணிக்கை | ஷாடவ ஷாடவம் | ஔடவ ஔடவம் | வக்கிர சம்பூர்ணம் | வக்கிர ஷாடவம் | வக்கிர ஔடவம் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | சம்பூரணம் | 1 | 6 | 15 | 38 | 144 | 210 | **414** |
| 2. | ஷாடவ ஷாடவம் | 6 | 36 | 90 | 228 | 864 | 1,260 | **2,484** |
| 3. | ஔடவ ஔடவம் | 15 | 90 | 225 | 570 | 2,160 | 3,150 | **6,210** |
| 4. | வக்கிர சம்பூர்ணம் | 38 | 228 | 570 | 1,444 | 5,472 | 7,980 | **15,732** |
| 5. | வக்கிர ஷர்டவம் | 144 | 864 | 2,160 | 5,472 | 20,736 | 30,240 | **59,616** |
| 6. | வக்கிர ஔடவம் | 210 | 1,260 | 3,150 | 7,980 | 30 240 | 44,100 | **86,940** |
| | மொத்தம் | 414 | 2,484 | 6,210 | 15,732 | 59,616 | 86,940 | **1,71 396** |

1. ஆதாரம் : பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி எழுதிய "South Indian Music" Book—VI (பக்கம் 141—178)

2. ஆதாரம் : "History of South Indian Music" by R. Rangaramanuja Iyyengar (Page 60)

3. ஒரே வகையான சுரங்கள் உள்ள இராகங்களுக்கு மேளம் அல்லது தொகுதி என்று பெயர் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு தொகுதிக்கும் அதில் பிரசித்மாக இருக்கும் இராகத்தின் பெயர் கொடுக்கப்பட்டது.
ஆதாரம் : சாஸ்திரீய சங்கீதம்—முதல் பாகம்—திரு. கே. வாசுதேவ சாஸ்திரி இயற்றியது.

4. ஆதாரம் : கருணாமிர்த சாகரம்—முதல் புத்தகம்—(பக்கம் 623).

5. ஆதாரம் : ஆர். ரங்கராமானுஜ ஐயங்கார் இயற்றிய "History of South Indian Music" பக்கம் 168.

6. ஆதாரம் : கருணாமிர்த சாகரம் முதல் நூல் (பக்கம் 632 முதல் 635 வரை).

7. அபிதான சிந்தாமணி என்னும் பொருளகராதி நூல் (கலைக்களஞ்சியம்) ஆ. சிங்காரவேலு முதலியாரால் 1910-ம் ஆண்டு வெளியிடப்பெற்றது. ஆயிரம் பக்கங்களுக்கு மேல்கொண்ட இந்நூலில் பரதம் என்ற சொல்லின் தலைப்பின் கீழ் பூர்வ காலத்தில் வழக்கில் இருந்த 32 தலைமைபெற்ற இராகங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இராகங்கள் பற்றிய வேறு பல விவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

8. "பூர்வீக சங்கீத உண்மை" என்ற நூல் மைசூர் சமஸ்தான வித்துவான் மதுரை நாகசுரம் எம். கே. எம். பொன்னுச்சாமிபிள்ளையால் 1930-ம் ஆண்டு வெளியிடப்பெற்றது. கருணாமிர்த சாகரம் இரண்டாவது நூல் 96-ம் பக்கத்தில் பழந்தமிழ் நாட்டில் வழக்கிலிருந்த 32 தாய் இராகங்கள் கொண்ட அட்டவணை கொடுக்கப்பட்டுள்ளது.

9. வேங்கடமகி அமைத்துள்ள 72 மேளகர்த்தா இராகங்களைப் பற்றிய விவரங்களை சென்னைப்பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவர் டாக்டர் எஸ். சீதா எழுதிய "Tanjore as a Seat of Music" என்ற ஆய்வு நூலிலும் (பக்கம் 408—426) இசைப்பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி இயற்றிய "The History of Indian Music" (பக்கம் 40—45) என்ற நூலிலும் காணலாம்.

10. வர்ஜ இராகத்தை "ஒருஉப்பண்" என அழைக்கலாம் என டாக்டர் வீ. ப. கா. சுந்தரம் இயற்றிய "இசைத்துறைத் தமிழ்ச்சொற்கள்" என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. (பக்கம் 22).

11. பண் நால்வகைப்படும் : பண், பண்ணியம், திறம், திறத்திறமென. சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்தகாதை. செய்யுள். அடி 106. சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதை, செய்யுள் அடி 46 — விளக்கவுரை அடியார்க்கு நல்லார்.

12. பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி இயற்றிய "கர்நாடக சங்கீத புத்தகம்" இரண்டாம் பாகம் பக்கம் 3-ல் வேறு பல உதாரணங்களையும் காணலாம்.

6A

13. ஆதாரம்: டாக்டர் வீ. ப. கா. சுந்தரம் இயற்றிய ''இசைத்துறைத் தமிழ்ச்சொற்கள்'' என்னும் நூல்—பக்கம் 24.

14. வேறுபல உதாரணங்கள் பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி இயற்றிய ''கர்நாடக சங்கீத புத்தகம்'' இரண்டாவது பாகம் 5வது பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

15. ஆதாரம்: ''இசைத்துறைத் தமிழ்ச்சொற்கள்''—நூல்—பக்கம்—27.

16. வக்கிர பேதங்கள் மூலம் கிடைக்கும் இராகங்கள் பற்றிய விவரங்களை கருணாமிர்த சாகரம் இரண்டாவது நூலில் காணலாம் (பக்கம் 17–36).

17. ஆதாரம்: கருணாமிர்த சாகரம்—இரண்டாவது புத்தகம்—பக்கம் 36.

# 8

# இராக ஆலாபனம்

இயலும், இசையும் கலந்து பாடலாகப் பாடுவதை எல்லா நாடுகளின் இசையிலும் நாம் காணலாம். சுரங்களையோ, பாடல்களையோ பாடாமல் இராகத்தை மட்டும் தனியாகப் பாடும் மரபு நம் பாரத நாட்டில் மட்டும் உண்டு. இவ்வாறு இராகத்தை மட்டும் பாடுவதை நாம் இராக ஆலாபனம்[1] என்று சொல்லுகிறோம். இராகத்தை ஆலாபனம் செய்வது நம் நாட்டு இசையின் தனிச்சிறப்பாகும்.

**குருகுலப்பயிற்சி :**

முன்னாளில் இராகங்களை ஆலாபனம் செய்வதற்கு இசை மாணவர்கள் குருகுல முறையில் பல ஆண்டுகள் பயின்றனர். குரு எவ்வாறு இராகங்களை விரிவாக, கற்பனைத் திறனுடன் ஆலாபனம் செய்கிறார் என்பதை மாணவர்கள் தங்கள் குரு நிகழ்த்தும் இசை நிகழ்ச்சிகளில் கேட்டுக்கேட்டுத் தெரிந்துகொண்டனர். இவ்வாறுதான் இராக ஆலாபனம் செய்யவேண்டும் என்று குரு அக்காலத்தில் மாணவர்களுக்குச் சொல்லிக்கொடுப்பதில்லை.

இராக ஆலாபனம் என்பது காதால் கேட்டுக்கேட்டுக் கற்றுக்கொள்ள வேண்டிய ஒன்று. இராகங்களின் போக்கு (சஞ்சாரம்), சுரத்தொடர்கள், சாயல்கள் (மூர்ச்சனைகள்), நுட்பமான பிடிகள், நுட்பசுருதிகள் கொண்ட வளைவு குழைவுகள், பிர்க்காக்கள் — இவைகள் எல்லாம் சீடர்களுக்குச் செவியின் மூலம் கேட்டுக் கேட்டுக் கிடைக்கும் செவிச் செல்வமாகும்.

**நிறுவனங்களில் இராகப்பயிற்சி :**

இப்போது பல்கலைக்கழகங்கள், இசைக் கல்லூரிகள் போன்ற கல்வி நிறுவனங்களில் ஆசிரியர்கள் நேரடியாக மாணவர்களுக்கு இசை கற்றுத் தருகிறார்கள். இசைத்துறைக்கென பாடதிட்டங்கள் வகுக்கப்பட்டு, மாணவர்களுக்கு இசை கற்பிக்கப்படுகிறது. இராகங்களை ஆலாபனம் செய்வதற்கு மாணவர்கள் ஆசிரியர்களிடம் பயிற்சி பெறுவதோடுகூட, பிரபல இசை விற்பன்னர்கள் பாடியுள்ள இராக ஆலாபனங்கள் ஒலிப்பதிவு செய்யப்பட்ட ஒலி நாடாக்கள். இசைத்தட்டுகள் முதலியவைகளைக் கேட்டும் கற்றுக்கொள்ளுகிறார்கள்.

**சீவசுரம்—இராகத்தின் உயிர்நாடி :**

ஓர் இராகத்தை ஆலாபனம் செய்யும்போது அந்த இராகத்தில் வரும் சுரங்கள், அந்த இராகத்தின் ஆரோசை, அமரோசை (ஆரோகணம், அவரோகணம்) முதலியவைகளை அறிந்திருக்கவேண்டும். இதோடுகூட அந்த இராகத்தின் உயிர்நாடியாக விளங்கும் சீவசுரம், அடுத்தபடி முக்கிய சுரமான அமுதவைப்பு, இணை, கிளை, நட்புச்சுரத்தொடர்கள் முதலியவைகளை அறிந்து ஆலாபனம் செய்தால் அது மிகவும் சிறப்பாக அமையும் என்பதில் ஐயமில்லை.

**ஆளத்தி :**

பழந்தமிழ் மக்கள் ''ஆளத்தி'' என்னும் சொல்லைப் பயன்படுத்தி வந்தனர். அக்காலத்தில் ஆளத்தி என்னும் சொல் வெறும் இராகத்தை மட்டும் குறிக்காமல் இராகம், தானம், நிரவல், பாடல் முதலியவற்றையும் குறிப்பிட்டது என்று நாம் அறிகிறோம்.

**ஆளத்தியின் மூன்று வகைகள் :**

ஆளத்தியின் மூன்று வகைகளைப்பற்றி அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டு உள்ளார். காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தி என்பவை இம்மூன்று வகை ஆளத்தியாகும். காட்டாளத்தி அச்சுடன் நிகழும். அதாவது அகரமாக தாளத்துடன் நிகழ்வதாகும். தானம், பல்லவி, நிரவல் முதலியவை காட்டாளத்தியைச் சார்ந்தவையாகும்[2].

நிறவாளத்தி என்பது நிறங்குலையாமல் பாரணையுடன் நிகழ்வது. பாரணையாவது நெடிலாய் அகண்டமான ஓசையுடன் கூத்துடன் நிகழ்வதாம். இது வெறும் இராகத்தை மட்டும் ஆலாபனம் செய்வதைக் குறிக்கும்.

பண்ணாளத்தி பண்ணையே கருதி வைக்கப்படுவதாகும். இது பாவோடு பொருந்தினதாய் வருவது. உதாரணமாக கீதம், கீர்த்தனை, பதம் முதலியவை பண்ணாளத்தியைச் சேர்ந்தவையாகும். அக்காலத்தில் பாடலின் பொருளை அறிந்து அதற்கேற்ற முறையில் பண்ணைத் தேர்ந்தெடுத்து, பண் அமைத்தது மிகவும் சிறப்பானதொன்றாகும்.

**ஆலாபனம் செய்யவேண்டிய முறை:**

ஓர் இராகத்தை ஆலாபனம் செய்யும்போது ''ம்'' என்று சுருதியில் ஆரம்பித்து, தென்னா, தெனா, தென்னா தெனா என்று ஆலாபனம் செய்ய வேண்டும் என்று சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் சொல்லப் பட்டிருக்கிறது.

''மகரத்தின் ஒன்றால் சுருதி விரவும்
பகரும் குறில் நெடில் பார்த்து—நிகரிலாத்
தென்னா தெனாவென்று பாடுவரேல் ஆளத்தி
மன்னாவிச் சொல் வகை''

— (சிலப்பதிகாரம்—அரங்கேற்று காதை அடி 26-36—
அடியார்க்கு நல்லார் உரை)

**ஆலாபனத்திற்குப் பயன்படும் எழுத்துக்கள்:**

ஆலாபனத்திற்குப் பயன்படும் எழுத்துக்கள் எவை என அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகிறார்.

''குன்றாக் குறிலைந்தும் கோடா நெடிலைந்தும்
நின்றார்ந்த மந்நகரந் தவ்வொடு—நன்றாக
நீளத்தால் ஏழும் நிதானத்தான் நின்றியங்க
ஆளத்தியாமென்றறி''

— (அரங்கேற்று காதை
வரி 26-36—அடியார்க்கு நல்லார் உரை)

ஆலாபனம் செய்யும்போது அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்து குற்றெழுத்துக்களும், ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்னும் ஐந்து நெட்டெழுத்துக் களும், மெய்யெழுத்து பதினெட்டினுள்ளும் மவ்வும், நவ்வும், தவ்வும் என்பவை தவிர, மற்ற எழுத்துக்கள் பயன்படுத்தப்படக்கூடாது என்று தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இசை வல்லுநர்களில் சிலர் இந்தக்

காலத்தில் இராக ஆலாபனம் செய்யுபோது தரனனா என்றும், தொரனனா என்றும், ததரிலா என்றும் உச்சரித்துப் பாடுகிறார்கள். இவை நம் மரபிற்கு உகந்ததல்ல எனத்தெரிகின்றது.

இராக ஆலாபனம் பாடிய பின்பு தானம் பாடும் போழுது த — — ன — — ம். தா — ஆ ஆ — — ன — — அ — — அ — — அம்ம — — என்று பாடுகிறோம். மவ்வும், நவ்வும், தவ்வும் தான் தானத்தில் உச்சரிக்கப்படுகின்றன என்பதை நாம் அறிவோம்.

---

1. ''தென்னிந்திய இசையில் இராக ஆலாபனம்'' எனனும் தலைப்பில் டாக்டர். டி. விஸ்வநாதன் எழுதியுள்ள ஆய்வு நூலில் இராக ஆலாபனம் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த ஆய்வுப் பணியின் ஒரு பகுதியாக பைரவி, கல்யாணி, காம்போதி, சங்கராபரணம், சாவேரி, தோடி ஆகிய ஆறு இராகங்கள் திருமதி டி. பிருந்தா காலம்சென்ற ராமநாதபுரம் வி. கிருஷ்ணன், திரு. கே. வி. நாராயணசாமி, திரு. டி. எம் தியாகராஜன், திருமதி. எம். எல். வசந்தகுமாரி ஆகியோரால் ஆலாபனம் செய்யப்பட்டு, ஒலிநாடாக்களில் அளிக்கப்பட்டுள்ளன.

2. ஆதாரம்: கருணாமிர்த சாகரம் இரண்டாம் புத்தகம் (பக்கம் 281—282).

# 9

# தாளம்

பழந்தமிழ் மக்கள் இசைத் தமிழில் கையாண்ட தாள வகைகளைப் போல் வேறு எந்த நாட்டிலும் கையாளப்பெறவில்லை என்று கூறலாம். நுட்பமான சுருதிகளைக் கொண்ட பல பண்களை அவர்கள் பாடி வந்ததுபோல பல நுட்பமான தாளங்களையும் அவர்கள் பயன்படுத்தி வந்தனர்.

இசைப்பாடலுக்கும் ஆடலுக்கும் தாளம்[1] அடித்தளமாய் இருப்பதால் அதற்குத் தாளம் என்னும் பெயர் உண்டாயிற்று. தாளம் கையினால் கொட்டப்படுவதால் அதற்குப் பாணி என்றும், கொட்டு என்றும் பெயர் உண்டு. தாளம் என்ற சொல் வழக்கில் வரவே கொட்டு என்னும் சொல்லும், பாணி என்னும் சொல்லும் வழக்கொழிந்தன. தாளம் இசையை ஓர் அளவுக்குள் நிறுத்தி, அது என்றும் மாறாதபடி நிலைபெற்று விளக்கச் செய்கிறது. இசையும், ஆடலும் வரம்பு கடந்து செல்லும் ஆறுகள் என்றால், தாளம் அவற்றை ஒரு வரம்புக்குள் கட்டுப்படுத்தும் கரையாகும்.

இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரத்தின் அரங்கேற்றுகாதையில் வரும் அடியார்க்கு நல்லார் உரைப்பகுதியில் தாளத்தைப்பற்றி பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

''கொட்டுமசையுந் தூக்குமளவும்
ஒட்டப்புணர்ப்பது பாணியாகும்''

''ககரம் கொட்டே எகரம் அசையே
உகரம் தாக்கே அளவே ஆய்தம்''

இதில் கொட்டு, அசை முதலியவற்றின் கால அளவும், அதன் வடிவும் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் கூறப்பெறும் ககரம் முதலியவை அளவின் குறியீடுகளாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கொட்டு | — | அரை மாத்திரை | — | வடிவம் | க |
| அசை | — | ஒரு மாத்திரை | — | வடிவம் | எ |
| தாக்கு | — | இரண்டு மாத்திரை | — | வடிவம் | உ |
| அளவு | — | மூன்று மாத்திரை | — | வடிவம் | ஃ |

**தாளங்களின் ஆறு அங்கங்கள் :**

அனுத்ருதம், த்ருதம், லகு, குரு, புலுதம், காகபதம் என்பன தாளங்களின் ஆறு அங்கங்களாகும்.

1. அனுத்ருதம்—குறி U — மறு பெயர்கள்—துடி, விந்து, புள்ளி, விராமம்—
கால் மாத்திரை—எண் ஒன்று.

2. த்ருதம்—குறி O — மறுபெயர்கள்—விழி, கொம்பு, விட்டம், மதி, கண்
என்பன அரைமாத்திரை—எண் இரண்டு

3. லகு—குறி | — மறுபெயர்கள்—கோல், சரம், பாணம் (அம்பு)
ஒரு மாத்திரை—எண் நான்கு.

4. குரு—குறி 8 — மறுபெயர்கள்—தனு, வில், சிலை என்பன
இரண்டு மாத்திரைகள்—எண் எட்டு.

5. புலுதம்—குறி 1 — மறுபெயர்கள்—மீன், மணி, புயங்கம்
8 மூன்று மாத்திரைகள்—எண் பன்னிரண்டு.

6. காகபதம்—குறி + மறுபெயர்—புள்ளடி—நான்கு மாத்திரைகள்.
எண் பதினாறு.

**108 தாளங்கள் :**

பழந்தமிழ் மக்கள் பயன்படுத்திய நூற்றெட்டுத் தாளங்களின் இலக்கணங்களை பஞ்சமரபு, சச்சபுட வெண்பா போன்ற நூற்களுள் காணலாம். தாளத்தின் ஆறு அங்கங்களும் அக்காலத்தில் வழக்கில் இருந்தன.

**பஞ்சமரபு :**

அடியார்க்கு நல்லார் தாம் எழுதிய சிலப்பதிகார உரைப்பகுதியில், தாம் உரையெழுதுவதற்கு உதவியாக இருந்த இசை நூற்களைக் குறிப்பிடும் போது, அறிவனார் இயற்றிய பஞ்சமரபு பற்றிக் கூறியிருக்கிறார். அறிவனார், கூடல்மாநகர் என்று வழங்கப்பட்ட மதுரையில், கடைச்சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த முடத்திருமாறன் என்னும் பாண்டிய மன்னன் காலத்தைச் சேர்ந்தவர் எனத்தெரிகிறது இந்த நூல் இசை மரபு, வாச்சிய மரபு (முழவு), நிருத்த மரபு, அவிநய மரபு, தாள மரபு என்னும் ஐந்து மரபுகளைப்பற்றிக் கூறுவதால் பஞ்சமரபு என்று அழைக்கப்பட்டது. இதில் தாள மரபு என்னும் பகுதியில் பூர்வ தமிழ் மக்கள் பயன்படுத்திவந்த தாளங்களின் அங்கங்கள், மாத்திரைகள், எண்கள் முதலியவை கொடுக்கப்பட்டு உள்ளன. தாள நூற்பா மரபில் 108 தாளங்களின் பெயர்களும், அவற்றின் இலக்கணங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த 108 தாளத்தில் முதல் தாளத்தின் பெயர் சச்சபுடம். கடைசித் தாளத்தின் பெயர் பெத்தாபரணம்.

சிலப்பதிகாரத்தின் உரைப்பகுதியிலே முப்பது வகை தாளக் கருவிகளின் பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. தண்ணுமை ஆசிரியன் எவ்வாறு பல்வேறு தாளங்களில் தேர்ச்சி பெற்றிருந்தான் என்று அதனுள் பார்க்கிறோம்.

**சச்சபுட வெண்பா :**

108 தாளங்களுடன் ஐந்து தாளங்களையும் சேர்த்து 113 தாளங்களின் அங்க விவரங்கள், மாத்திரா காலம், வரிசை எண் ஆகிய இலக்கணங்களைக் கூறும் வெண்பா வடிவிலே அமைந்துள்ள தாள இலக்கண நூல் சச்சபுட வெண்பாவாகும். ஒவ்வொரு தாளத்திற்கும் ஒவ்வொரு வெண்பா உள்ளது. அவ்வெண்பாவில் அத்தாளத்தின் பெயர், அத்தாளத்தின் அங்க விவரங்கள், மாத்திரா காலம், எத்தனையாவது தாளம் என்பவை போன்ற விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் முதல் நூல் அகத்திய சூத்திரம் என்றும், வரதுங்க ராமபாண்டிய மன்னரின் மகனார் வரகுண பாண்டியன் என்பவரால் இந்த நூல் இயற்றப்பட்டதென்றும் ஆராய்ச்சியிலிருந்து தெரிகிறது. இவரது காலம் கி. பி. 1613-க்குப் பிற்பட்டதாகத் தெரிகிறது.

**முதல் மூன்று அங்கங்கள் :**

தாளத்தில் முதல் மூன்று அங்கங்களையே நாம் இப்பொழுது பயன்படுத்தி வருகிறோம்.

1) அனுத்ருதம்—ஒரு தட்டு—அட்சர காலம்—ஒன்று—இதன் குறி—U

2) த்ருதம்—ஒரு தட்டும் ஒரு வீச்சும்—அட்சர காலம்—இரண்டு—
இதன் குறி—O

அனுதிருதத்திற்கும் திருதத்திற்கும் ஜாதி பேதம் கிடையாது.

3) லகு—ஒரு தட்டும் விரலெண்ணிக்கைகளும்—இதன் குறி—1
விரல் எண்ணிக்கை என்பது அட்சர நிரலைக் குறிக்கும்.

ஜாதி பேதங்களினுல் லகுவின் மொத்த அட்சர காலம் முறையே மூன்று, நான்கு, ஐந்து, ஏழு, ஒன்பதாக வரும்.

| லகுவின் வகை | தட்டும், விரல் எண்ணிக்கையும் | அட்சர காலம் | குறி |
|---|---|---|---|
| 1) திஸ்ர லகு | ஒரு தட்டு<br>இரண்டு விரல் எண்ணிக்கை | 3 | /3 |
| 2) சதுரச்ர லகு | ஒரு தட்டு<br>மூன்று விரல் எண்ணிக்கை | 4 | /4 |
| 3) கணட லகு | ஒரு தட்டு<br>நான்கு விரல் எண்ணிக்கை | 5 | /5 |
| 4) மிச்ர லகு | ஒரு தட்டு<br>ஆறு விரல் எண்ணிக்கை | 7 | /7 |
| 5) சங்கீர்ண லகு | ஒரு தட்டு<br>எட்டு விரல் எண்ணிக்கை | 9 | /9 |

**ஏழு முக்கியமான தாளங்கள் :**

தற்கால இசையில் ஏழு முக்கியமான தாளங்கள் உள்ளன.

அவையாவன:

1. துருவ தாளம்
2. மட்டிய தாளம்
3. ரூபக தாளம்
4. ஜம்பை தாளம்
5. திரிபுடை தாளம்
6. அட தாளம்
7. ஏக தாளம்

1. துருவ தாளத்தின் அங்கங்கள் — | 0 | |
2. மட்டிய தாளத்தின் அங்கங்கள் — | 0 |
3. ரூபக தாளத்தின் அங்கங்கள் — 0 |
4. ஜம்பை தாளத்தின் அங்கங்கள் — | u 0
5. திரிபுடை தாளத்தின் அங்கங்கள் — | 0 0
6. அட தாளத்தின் அங்கங்கள் — | | 0 0
7. ஏக தாளத்தின் அங்கங்கள் — |

இந்த ஏழு தாளங்களும் லகுவின் ஐந்து ஜாதி பேதங்களினால் 7 × 5 = 35 தாளங்களாகின்றன.

## 35 தாளங்கள்

| தாளம் | ஜாதி | | அங்கம் | மொத்த அட்சர காலம் |
|---|---|---|---|---|
| துருவ தாளம் | 1. | திச்ரம் | /3 0 /3 /3 | 3+2+3+3=11 |
| | 2. | சதுரச்ரம் | /4 0 /4 /4 | 4+2+4+4=14 |
| | 3. | கண்டம் | /5 0 /5 /5 | 5+2+5+5=17 |
| | 4 | மிச்ரம் | /7 0 /7 /7 | 7+2+7+7=23 |
| | 5. | சங்கீர்ணம் | /9 0 /9 /9 | 9+2+9+9=29 |
| மட்டிய தாளம் | 1. | திச்ரம் | /3 0 /3 | 3+2+3= 8 |
| | 2. | சதுரச்ரம் | /4 0 /4 | 4+2+4=10 |
| | 3. | கண்டம் | /5 0 /5 | 5+2+5=12 |
| | 4. | மிச்ரம் | /7 0 /7 | 7+2+7=16 |
| | 5. | சங்கீர்ணம் | /9 0 /9 | 9+2+9=20 |
| ரூபக தாளம் | 1. | திச்ரம் | 0 /3 | 2+3= 5 |
| | 2. | சதுரச்ரம் | 0 /4 | 2+4= 6 |
| | 3. | கண்டம் | 0 /5 | 2+5= 7 |
| | 4. | மிச்ரம் | 0 /7 | 2+7= 9 |
| | 5. | சங்கீர்ணம் | 0 /9 | 2+9=11 |
| ஜம்பை தாளம் | 1. | திச்ரம் | /3 U 0 | 3+1+2= 6 |
| | 2. | சதுரச்ரம் | /4 U 0 | 4+1+2= 7 |
| | 3. | கண்டம் | /5 U 0 | 5+1+2= 8 |
| | 4. | மிச்ரம் | /7 U 0 | 7+1+2=10 |
| | 5. | சங்கீர்ணம் | /9 U 0 | 9+1+2=12 |

| தாளம் | | ஜாதி | அங்கம் | மொத்த அட்சர காலம் |
|---|---|---|---|---|
| திரிபுடை தாளம் | 1. | திச்ரம் | \|300 | 3+2+2= 7 |
| | 2. | சதுரச்ரம் | \|400 | 4+2+2= 8 |
| | 3. | கண்டம் | \|500 | 5+2+2= 9 |
| | 4. | மிச்ரம் | \|700 | 7+2+2=11 |
| | 5. | சங்கீர்ணம் | \|900 | 9+2+2=13 |
| அடதாளம் | 1. | திச்ரம் | \|3 \|300 | 3+3+2+2=10 |
| | 2. | சதுரச்ரம் | \|4 \|400 | 4+4+2+2=12 |
| | 3. | கண்டம் | \|5 \|500 | 5+5+2+2=14 |
| | 4. | மிச்ரம் | \|7 \|700 | 7+7+2+2=18 |
| | 5. | சங்கீர்ணம் | \|9 \|900 | 9+9+2+2=22 |
| ஏக தாளம் | 1. | திச்ரம் | \|3 | 3 |
| | 2. | சதுரச்ரம் | \|4 | 4 |
| | 3. | கண்டம் | \|5 | 5 |
| | 4. | மிச்ரம் | \|7 | 7 |
| | 5. | சங்கீர்ணம் | \|9 | 9 |

**175 தாளங்கள் :**

35 தாளங்கள் ஒவ்வொன்றும் திச்ர கதி, சதுரச்ர கதி, கண்ட கதி, மிச்ர கதி, சங்கீர்ண கதி என்னும் ஐந்து கதி பேதங்களினால் மீண்டும் $35 \times 5 = 175$ தாளங்களாகின்றன.

ஏழு தாளங்களில் ஒவ்வொன்றும், ஐந்து ஜாதி பேதங்களினாலும், 5 கதி பேதங்களினாலும் 25 பேதங்களை அடைகின்றன. ஜாதி பேதம் லகுவிற்குத்தான் ஏற்படும். ஆனால் கதிபேதமானது ஒவ்வொரு அங்கத்திற்கும் உண்டு.

**எடுப்பு :**

ஒரு பாட்டு, தாளத்தில் எந்த இடத்தில் ஆரம்பிக்கிறதோ அந்த இடத்திற்கு எடுப்பு என்று பெயர். எடுப்பு மூன்று வகைப்படும்.

1) சம எடுப்பு — தாளமும் பாட்டும் ஒரே சமயத்தில் ஆரம்பமாகும்.
2) அனாகத எடுப்பு — தாளத்திற்குப் பின் பாட்டு ஆரம்பமாகும்.
3) அதீத எடுப்பு — தாளத்திற்கு முன் பாட்டு ஆரம்பமாகும்.

சமமற்ற எடுப்பை விஷம[2] எடுப்பு என்று குறிப்பிடுகிறார்கள்.

**காலம் :**

தாளத்தின் வேகம் அல்லது போக்கைக் குறிப்பிட நாம் முதற் காலம், இரண்டாம் காலம், மூன்றாம் காலம், நான்காம் காலம் என்று அழைக்கிறோம். வடமொழியில் இதை விளம்ப காலம், மத்திம காலம், துரித காலம், அதிதுரித காலம் என்று குறிப்பிட்டார்கள். பூர்வ தமிழ் மக்கள் தாளத்தின் காலத்தைப் பாணி அல்லது இயக்கு என்று அழைத்தார்கள். நால்வகைக் காலத்தை அவர்கள் முதல் நடை, வாரம், கூடை, திரள் என்று அழைத்தார்கள்.

| நெ. | தமிழ்ப் பெயர் | வடமொழிப் பெயர் | கால வரிசை |
|---|---|---|---|
| 1. | முதல் நடை | விளம்ப காலம் | முதற் காலம் |
| 2. | வாரம் | மத்திம காலம் | இரண்டாம் காலம் |
| 3. | கூடை | துரித காலம் | மூன்றாம் காலம் |
| 4. | திரள் | அதிதுரித காலம் | நான்காம் காலம் |

முதல் நடை என்று அழைக்கப்பட்ட விளம்ப காலம் மிகவும் காலச் செலவினையுடைய தாமதமான மந்த நடையாகும். திரள் என்று கூறப்படும் அதிதுரித காலம் மிகக்குறைந்த காலச்செலவினையுடைய அதிக முடுகலான நடையாகும். பொதுவாக, பெரும்பாலும் பாடல்கள் அதிகமாக மத்திம காலம், துரித காலம் என்று அழைக்கப்படும் வார நடையிலும், கூடை நடையிலுமே அமைந்திருக்கின்றன. இவ்விரண்டு நடைகளும் அதிக மந்தமாயுமில்லாமல், அதிக முடுகிய நடையுமல்லாமல் இவ்விரண்டிற்கும் நடுப்பட்ட நடைகளாக இருக்கின்றன. பாட்டின் பொருட்சுவையும் இந்த நடைகளில் குன்றாமல் இருக்கிறது.

**நாம் தற்சமயம் பயன்படுத்தும் தாளங்கள் :**

நாம் தற்சமயம் பெரும்பாலும் ஆதி தாளம், ரூபக தாளம், சாபு தாளம், ஜம்பை தாளம், ஏக தாளம் முதலிய தாளங்களையே பயன்படுத்து கிறோம். சில வர்ணங்கள் பாடும்பொழுது மட்டும் கண்ட ஜாதி அட தாளத்தைப் பயன்படுத்துகிறோம்.

ஆதி தாளம் — சதுரச்ர ஜாதி திரிபுடைதாளமாகும்.
அட்சர காலம்—4 + 2 + 2 = 8

ரூபக தாளம் — சதுரச்ர ஜாதி ரூபகதாளமாகும்.
அட்சர காலம்—2 + 4 = 6

| | | |
|---|---|---|
| சாபு (திரிபுடை) தாளம் | — | திச்ரஜாதி திரிபுடை தாளமாகும், அட்சர காலம்—$3+2+2=7$ |
| அடதாளம் | — | கண்ட ஜாதி அட தாளமாகும். |
| | — | அட்சர காலம்—$5+5+2+2=14$ |

**சுரத்தின் கால அளவு :**

சுரத்தின் கால அளவை நாம் இவ்வாறு குறிப்பிடுகிறோம்.

| | | |
|---|---|---|
| <u>ச</u> | — | அரை அட்சரம் |
| ச | — | ஓர் அட்சரம் |
| சா | — | இரண்டு அட்சரம் |
| ; | — | இரண்டு அட்சரம் |
| , | — | ஓர் அட்சரம் |
| சா ; | — | நான்கு அட்சரம் |
| சா ; , | — | ஐந்து அட்சரம் |
| சா ; ; | — | ஆறு அட்சரம் |

ஒரு சுரத்தின் கீழ் கிடைகோடு போட்டிருந்தால் அதன் அட்சர காலம் பாதியாகும்.

---

1. கூத்தாகிய நடனம் தாளை அடிப்படையாகக் கொண்டமையின், தாள்களின் அமைப்பொலியே தாளம் எனலாயிற்று.

2. ஸமத்திற்கு வேறுபட்டது வ்ஸமம். இச்சொல் வழக்கில் விஷமம் என்றே ஆளப்பட்டு வருகிறது.

# 10

# 72 மேளகர்த்தா இராகங்களும் அவைகளில் பிறந்த கிளை இராகங்களும்

தொகுத்து எழுதப்பெற்ற மொத்த இராகங்கள் 3512

*தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய ''கருணாமிர்த சாகரம்— இரண்டாவது நூல்'', ஆர். ரெங்கராமானுஜ ஐயங்கார் இயற்றிய* **''History of South Indian Carnatic Music''**, *சுந்தரராஜ சுவாமிகள் இயற்றிய ''பரத சங்கீத ஸ்வயபோதினி'', டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் இயற்றிய ''இராகமாலை அல்லது இராகப்பிரஸ்தாரங்கள்'' ஆகிய நூற்களிலிருந்து தொகுத்து எழுதப்பெற்றவை. இந்த நூற்களின் ஆசிரியர்களுக்கும் உரிமை யாளர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.*

துபா. ஆ தனபாண்டியன்

## 72 மேளகர்த்தாக்களில் சுத்த மத்யம சக்கரம் 6-ம் அவைகளில்வரும் 36 தாய் இராகங்களும்

| | இராகங்கள் | சுரங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | கனகாங்கி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 2. | ரத்னாங்கி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 3. | கானமூர்த்தி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 4. | வனஸ்பதி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 5. | மானவதி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 6. | தானரூபி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{2}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |
| 7. | சேனாவதி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 8. | ஹனுமத்தோடி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 9. | தேனுக | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 10. | நாடகப்ரியா | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 11. | கோகிலப்ரியா | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 12. | ரூபாவதி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |
| 13. | காயகப்ரியா | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 14. | வகுளாபரணம் | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 15. | மாயாமாளவகௌள | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 16. | சக்ரவாகம் | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 17. | சூர்யகாந்தம் | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 18. | ஹாடகாம்பரி | ச | ரி$^{2}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |
| 19. | ஜங்காரத்வனி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 20. | நடபைரவி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 21. | கீரவாணி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 22. | கரஹரப்ரியா | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 23. | கௌரிமனோஹரி | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 24. | வருணப்ரியா | ச | ரி$^{4}$ | க$^{4}$ | ம$^{2}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |

| இராகங்கள் | | சுரங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 25. | மாரரஞ்சனி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 26. | சாருகேசி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 27. | சரசாங்கி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 28. | ஹரிகாம்போதி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 29. | தீரசங்கராபரணம் | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 30. | நாகானந்தி | ச | ரி$^{4}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |
| 31. | யாகப்ரியா | ச | ரி$^{6}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 32. | இராகவர்த்தினி | ச | ரி$^{6}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 33. | காங்கேயபூஷணி | ச | ரி$^{6}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 34. | வாகதீஸ்வரி | ச | ரி$^{6}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 35. | சூலினி | ச | ரி$^{6}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 36. | சலநாட | ச | ரி$^{6}$ | க$^{6}$ | ம$^{2}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |

## 72 மேளகர்த்தாக்களில் பிரதி மத்திம சக்கரம் 6-ம் அவைகளில் வரும் 36 தாய் இராகங்களும்

| இராகங்கள் | | சுரங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 37. | சாலக | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 38. | ஜலார்ணவம் | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 39. | ஜாலவராளி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 40. | நவநீதம் | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 41. | பாவனி | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 42. | ரகுப்ரியா | ச | ரி$^{2}$ | க$^{2}$ | ம$^{4}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |
| 43. | கவாம்போதி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{2}$ | ச் |
| 44. | பவப்ரியா | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{4}$ | ச் |
| 45. | சுபபந்துவராளி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{2}$ | நி$^{6}$ | ச் |
| 46. | ஷட்விதமார்கினி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{4}$ | ச் |
| 47. | சுவர்ணாங்கி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{4}$ | நி$^{6}$ | ச் |
| 48. | திவ்யமணி | ச | ரி$^{2}$ | க$^{4}$ | ம$^{4}$ | ப | த$^{6}$ | நி$^{6}$ | ச் |

| இராகங்கள் | | சுரங்கள் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 49. | தவளாம்பரி | ச | ரி$^2$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 50. | நாமநாராயணி | ச | ரி$^2$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^4$ | ச் |
| 51. | காமவர்த்தினி | ச | ரி$^2$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^6$ | ச் |
| 52. | ராமப்ரியா | ச | ரி$^2$ | க$^6$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^4$ | ச் |
| 53. | கமனப்ரியா | ச | ரி$^2$ | க$^6$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^6$ | ச் |
| 54. | விஸ்வம்பரி | ச | ரி$^2$ | க$^6$ | ம$^4$ | ப | த$^6$ | நி$^6$ | ச் |
| 55. | சியாமளாங்கி | ச | ரி$^4$ | க$^4$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 56. | ஷண்முகப்ரியா | ச | ரி$^4$ | க$^4$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^4$ | ச் |
| 57. | சிம்மேந்திரமத்திமம் | ச | ரி$^4$ | க$^4$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^6$ | ச் |
| 58. | ஹேமவதி | ச | ரி$^4$ | க$^4$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^4$ | ச் |
| 59. | தர்மவதி | ச | ரி$^4$ | க$^4$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^6$ | ச் |
| 60. | நீதிமதி | ச | ரி$^4$ | க$^4$ | ம$^4$ | ப | த$^6$ | நி$^6$ | ச் |
| 61. | காந்தாமணி | ச | ரி$^4$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 62. | ரிஷபப்ரியா | ச | ரி$^4$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^4$ | ச் |
| 63. | லதாங்கி | ச | ரி$^4$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^6$ | ச் |
| 64. | வாசஸ்பதி | ச | ரி$^4$ | க$^6$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^4$ | ச் |
| 65. | மேசகல்யாணி | ச | ரி$^4$ | க$^6$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^6$ | ச் |
| 66. | சித்ராம்பரி | ச | ரி$^4$ | க$^6$ | ம$^4$ | ப | த$^6$ | நி$^6$ | ச் |
| 67. | சுசரித்ரா | ச | ரி$^6$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^2$ | ச் |
| 68. | ஜோதிஸ்வரூபிணி | ச | ரி$^6$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^4$ | ச் |
| 69. | தாதுவர்த்தனி | ச | ரி$^6$ | க$^6$ | ம$^4$ | ப | த$^2$ | நி$^6$ | ச் |
| 70. | நாசிகாபூஷணி | ச | ரி$^6$ | க$^6$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^4$ | ச் |
| 71. | கோசலம் | ச | ரி$^6$ | க$^6$ | ம$^4$ | ப | த$^4$ | நி$^6$ | ச் |
| 72. | ரசிகப்ரியா | ச | ரி$^6$ | க$^6$ | ம$^4$ | ப | த$^6$ | நி$^6$ | ச் |

